

**PULIKOLUM OR JELLICUT BULL.**

புலிக்குளம் அல்லது ஜெல்லிக்கட்டு காளை.

ஜி. ஏ. வைத்தியராமன் அண்டு கம்பெனி, 10, எஸ்பிளனேட், மதராஸ்.

G. A. VaidyaRaman & Co., 10, Esplanade, Madras.

# பிழைக்கும் வழி

# PRACTICAL LIFE

ஜி. எ. வைத்தியராமன், பி.எ.
பத்திராதிபர்.

G. A. VaidyaRaman, B. A.
EDITOR.

புஸ்தகம் 2. Vol. 2. | ஸௌமியவூ பங்குனிமீ —MARCH 1910. | ஸஞ்சிகை. 3. No. 3.


## பிழைக்கும் வழி.

முக்கியமாய் விவஸாயம், வியாபாரம், கைத்தொழில், பிரஜாலக்ஷணம், வித்தியா விஷயங்கள் அடங்கிய சகலருக்கும் உபயோகமான ஒரு மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

**தபாற்கூலி உள்பட சந்தா விவரம்.**

| | உள் நாடு. | அந்நிய நாடு. |
|---|---|---|
| வருஷம் 1க்கு | 4 0 0 | 6 0 0 |
| 6 மாதத்திற்கு | 2 0 0 | 3 0 0 |
| தனிப்பிரதி | 0 6 0 | 0 8 0 |

சந்தாப்பணத்தை ஒரு ஏஜெண்டினிடத்திலும் கொடுக்கக்கூடாது. சகலபணமும் எங்களுக்கு நேரில் அனுப்பப்படவேண்டும்.

**வியாஸம் எழுதுகிறவர்கள் கவனிக்கவேண்டியது.**

விவஸாயம், வியாபாரம், கைத்தொழில் விஷயங்களைப்பற்றி வியாஸங்கள் தேவை. அவைகள் ஒப்புக்கொள்ளப்பட்டால்பிரசுரமானதும் எழுதினவர்களுக்கு தக்க மரியாதை செய்யப்படும். ஒவ்வொரு வியாஸமும் கடுதாசியின் ஒரேபக்கத்தில் ஒரு பாதியைவிட்டு மறுபாதியில் மட்டில் எழுதப்பட வேண்டும். பேசும் தமிழ்தான் தேவை. கடினமான தமிழ் உதவாது.

ஜி. ஏ. வைத்தியராமன் அண்டு கம்பெனி,
10, எஸ்பிளனேட், மதராஸ்.

## Practical Life.

A popular Tamil monthly magazine of general information and instruction devoted mainly to agriculture, trade, industry, citizenship, and popular, scientific and technical education.

RATES OF SUBSCRIPTION POST FREE.

| | Inland. Rs. A. P. | Foreign. Rs. A. P. |
|---|---|---|
| Per annum ... | 4 0 0 | 6 0 0 |
| ,, half year ... | 2 0 0 | 3 0 0 |
| Single copy ... | 0 6 0 | 0 8 0 |

No Money should be paid to any Agent. All remittances and letters should be addressed to the Publishers Messrs. G. A. Vaidya Raman & Co., 10, Esplanade, Madras.

## EDITORIAL NOTES.
## பத்திராதிபர் குறிப்புகள்.

**Irrigation Facilities.**

பாசன சௌகரியங்கள்.—கோடைகாலம் பிறந்து விட்டபடியால் ஜலாதாரம் இல்லாத சாகுபடி நிலங்களுக்கு பாசன சௌகரியங்களை ஏற்படுத்திக்கொள்ள இதுவே தகுந்த காலம். கிணறுகள் வெட்டுவதைப்பற்றியும், தண்ணீர் இறைப்பதற்காக ஆயில் எஞ்சின்கள் போடுவதைப்பற்றியும் விவரங்கள் வேண்டுமென்று சிலபேர்கள் நமக்கு எழுதி யிருக்கிறார்கள். இவைகளைப்பற்றிய விவரங்களை இந்த ஸஞ்சிகையில், 'விசேஷத்திரட்டு' என்னும் பகுதியில் பிரசுரித்திருக்கிறோம்.

**Paddy Seeds.**

நெல் விதைகள்.—ஒற்றை நாற்றாய் நட்டு எடுக்கப்பட்ட பாங்குநெல் விதை ரூபாக்கு 9 பட்டணம் படி வீதம் நெல்லிக்குப்பத்திற்கு அடுத்த பாலூர் கவரன்மெண்டு பண்ணையில் கிடைக்கும். வேண்டியவர்கள் ஷை பண்ணை மானேஜருக்கு எழுதிப்பெற்றுக்கொள்ளலாம். இதோடு, இரண்டாம் போகமாகப் போடக்கூடிய அடியில்கண்ட விதைகளும் அவ்விடத்தில் அகப்படும். அவைகள், கருடன் சம்பா, மிளகு சம்பா, மல்லிகைச் சம்பா, முத்துச் சம்பா, சடைச்சம்பா, வெள்ளைச் சம்பா, வெள்ளைச் சிருமணியன், ஜீரகச்சம்பா, முதலியவை.

## The Cotton Industry.

பருத்திக் கைத்தொழில்:—போன பிப்ரவரி மாஸத்தில் நூலின் விலையேற்றத்தைப் பற்றிச் சொல்லும்பொழுது அதனல் நெசவுக்காரர்களுக்கு வெகுவாய் நஷ்டமுண்டாகுமென்று சொன்னேம். அனுபோகத்திலும் அப்படியே இருப்பதாகத் தெரிகிறது. போன வருஷத்தைவிட இந்த வருஷம் நூலின் விலை ராத்தல் ஒன்றுக்கு 2 அணு அதிகமாயிருக்கிறது. 10ம் நெம்பர்நூல் போனவருஷத்தில் விற்றதைவிட இந்த வருஷத்தில் ராத்தல் ஒன்றுக்கு $1\frac{1}{2}$ அணு அதிகமாக விற்கிறது. இதே மாதிரி 20ம் நெ. நூல் $1\frac{1}{4}$ அணு அதிகமாக விற்கிறது. ஆகவே தற்காலத்தில் பருத்தியை நூலாய்த்திரித்து விற்ருல் ராத்தல் ஒன்றுக்கு 10ம் நெ. நூலில் $\frac{1}{2}$ அணுவும், 20ம் நெ. நூலில் $\frac{1}{4}$ அணுவும் நஷ்டமாகிறது. போனவருஷத்தைவிட இந்த வருஷத்தில் துணியின் விலை ராத்தல் ஒன்றுக்கு $\frac{1}{4}$ அணுத்தான் அதிகமா இருக்கிறது. ஆகவே துணியாய் நெய்து விற்பதினல் ராத்தல் ஒன்றுக்கு $1\frac{3}{4}$ அணு வீதம் நஷ்டமாகிறது. இப்படிக்கெல்லாம் நஷ்டப்படுவதைப் பார்க்கிலும் வாரத்துக்கு ஒரு நாளோ இரண்டு நாளோ பஞ்சு ஆலைகளில் வேலையை நிறுத்திப்பார்க்கலாமென்று பம்பாய் பஞ்சாலைச் சொந்தக்காரர்கள் யோசித்துக்கொண்டிருக்கிருர்கள். இதே மாதிரியாக இங்கிலாந்து, அமெரிக்கா, ஆஸ்ட்ரியா, ப்ரான்ஸ், ஜெர்மெனி, ஜப்பான், ருஷியா இட்டலி, இன்னும் பல தேசங்களிலும் வேலையை நிறுத்தியிருக்கிருர்கள். இப்படி நிறுத்துவதின் கருத்து விலைக்கு, வரும் சரக்குகள் குறைந்து அவைகளின் விலை ஜாஸ்தியாகும் என்பதுதான்.

---

## India Government's Budget.

இந்தியா கவரன்மேண்டார் வரவு செலவு திட்டம்.—இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மாகாண கவரன்மெண்டாரும், இவர்களுக்கு மேலான இந்தியா கவரன்மெண்டாரும், வருஷாவருஷம் "அபீஷியல் இயர்" என்று சொல்லப்படும் ஏப்ரல் மாஸம் முதல் தேதி முதல் மார்ச்சுமாஸம் 31வ வரையிலுள்ள ஒரு வருஷத்திற்கு ராஜாங்கத்தை நடத்த என்ன செலவாகும், என்ன வரும்படி வரும், என்று ஒரு வரவு செலவு திட்டம் போடுவது வழக்கமென்றும், அந்த திட்டத்தை என்ன விதமாகப் போடுவது வழக்கமென்றும், போன ஜனவரிமாஸத்து ஸஞ்சிகையில் சொன்னேம் இப்பொழுது அந்தந்த மாகாண கவரன்மெண்டுகளின் திட்டங்களும், இந்தியா கவரன்மெண்டின் திட்டமும் வெளியாகி யிருக்கின்றன.

இந்தியா கவரன்மெண்டின் திட்டம் பின்வருமாறு:—

| | |
|---|---|
| | 1908-09. |
| | பவுன். |
| அயன் வரவு | 69,761,535. |
| செலவு | 73,499,245. |
| குறைவு | 3,737,710. |
| | 1909-10. |
| | மறு திட்டம் |
| | பவுன். |
| வரவு | 74,303,700. |
| செலவு | 74,034,200. |
| மீதி. | 2,69,500. |
| | 1910-11. |
| | மதிப்பு திட்டம் |
| | பவுன். |
| வரவு | 75,264,600. |
| செலவு | 75,018,700. |
| மீதி. | 245,900. |

இதனுல் செலவு அதிகமாகிக்கொண்டே வருவதாகத்தெரிகிறது 1910-11 வருஷத்தில் வேண்டிய செலவுக்கு இப்பொழுது வரும் வரும்படி போதாததால் அடியில் கண்டபடி புதுத் தீர்வைகள் விதித்து சுமார் 1,149,600 பவுன் வசூல் செய்யாலாமென்று எண்ணியிருக்கிருர்கள். சாராய தினுசுகளின் பேரில் இப்பொழுது இருப்பதைவிட பாதித்தீர்வை ஜாஸ்தியாகப் போட்டிருக்கிருர்கள். இதர தேசங்களிலிருந்து இறக்குமதியாகும் புகையிலேயின் பேரில் ராத்தல் 1க்கு ரூ. 1-8-0ம், சுருட்டின் பேரில் ராத்தல் 1க்கு ரூபாய் 2—8—0ம், ஸிகரெட்டின்பேரில் ராத்தல் 1க்கு சுமார் ரூபாய் 2-0-0ம், இன்னும் இதரப் புகையிலேச் சரக்குகளின்மேல் ராத்தல் 1க்கு ரூபாய் 1-10-0ம், கட்டிவெள்ளியின்மேல் அவுன்ஸ் 1க்கு நாலு அணுவும், கெரோஸின் எண்ணெயின்மேல் புட்டி 1க்கு மூன்று தம்படியும் புதிதாக வரிபோட்டு, இவைகளோடு வியாபார விஷயமான ஸ்டாம்புத் தீர்வைகளேயும் சில அம்ஸங்களுக்கு ஜாஸ்திப்படுத்தியிருக்கிருர்கள் மேலேசொல்லிய புதுத்தீர்வைகளால் வசூலாகக்கூடிய பணமும் மதிப்பு இட்ட வரவில் சேர்த்தே, காண்பித்திருக்கிரும்.

**The Madras Government's Budget.**

மதாாஸ் கவரன்மேண்டின் வரவு சேலவு திட்டம்.—மதராஸ் கவரன்மெண்டின் வரவு செலவு திட்டங்க்ள் பின் வருமாறு:—

1908-09.

| | ரூபாய். |
|---|---|
| அயன் வரவு | 582,15,000. |
| செலவு | 561,90,000. |
| மீதி. | 20,25,000. |

1909-10.
மறு திட்டம்

| | ரூபாய். |
|---|---|
| வரவு | 598,15,000. |
| செலவு | 586,03,000. |
| மீதி. | 12,12,000. |

1910-11.
மதிப்பு திட்டம்

| | ரூபாய். |
|---|---|
| வரவு | 613,04,000. |
| செலவு | 632,31,000. |
| குறைவு | 19,27,000. |

1910–11ம் வருஷத்தில் முன் வருஷங்களேப் போல் மிச்சம் ஏற்படாமல் செலவு ஜாஸ்தியாவதற்குக் காரணம் என்னவென்ருல்: சுகாதார அபிவிருத்திக்காகவும், சென்னப்பட்டணம் முனிஸிபாலிடிக்கும், இன்னும் இதர முன்ஸிபாலிடிகளுக்கும், சென்னேப்பட்டணம் துறைமுகக் கமிட்டியாருக்கும், ஆக பலவிதமாய் சுமார் 37 லக்ஷம் ரூபாய் செலவு செய்யவேண்டியதாய் வருமென்று திட்டம் போட்டிருப்பதினுல்தான்.

மதராஸ் கவரன்மெண்டார் இப்படி வரவுக்கு மிஞ்சி செலவு ஜாஸ்தியாய்ப் போவதற்காக புதுவரி ஒன்றும் போடமாட்டார்கள. ஜாஸ்திச் செலவை முன் வருஷங்களில் மிகுந்து கையிலிருக்கும் பணத்திலிருந்து செய்வார்கள். இப்படிக்கெல்லாம் செய்தும் 1910–11ம் வருஷத்தின் கடைசியில் மதராஸ் கவரன் மெண்டார் கையில் 112,92,000 ரூபாய் பாக்கியிருக்கலாம்.

## CO-OPERATION IN EUROPE AND INDIA

BY
DIWAN BAHADUR L. D. SWAMIKANNU PILLAI,
M. A., B.L., L.L.B.,
*Secretary, Board of Revenue, Madras.*

## ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் கூட்டுறவு.

கூட்டுறவுச் சங்கங்களினால் ஐரோப்பியர்கள் அடைந்துவரும் மகத்தான நன்மைகளைப்பற்றி நாம் வெகுவாய்க் கேள்விப்படுகிறோம். ஐரோப்பாவில் அபரிமிதமாய் ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஐக்கிய நாணயப் பண்டசாலைகள், ஐக்கிய நாணயத்தொழிற் சாலைகள் முதலிய ஸ்தாபனங்களுக்கு சொந்தக்காரர்கள் கோடீஸ்வரர்களா யிருக்கவேணுமென்று சில பேர்கள் எண்ணக்கூடும். இது பிசகு. அவர்கள் பணக்காரர்களே அல்ல. அவர்களெல்லாரும் அநேகமாய்ச் சாமானிய கைத்தொழிலாளிகளும், கூலியாட்களுமே. இவர்கள் கூட்டுறவுச் சங்கங்களைச் சேர்ந்திராவிட்டால் அவர்கள் எல்லாரும் அன்றாடும் ஜீவனத்துக்கு வழியில்லாதவர்களாயிருக்க வேண்டியவர்கள். ஐரோப்பாவில் சீதோஷ்ண வசதியும், நிலக்கரி, இரும்பு உற்பத்தி முதலிய சௌகரியங்கள் இருக்கின்றன என்றும், இப்படிப்பட்ட சௌகரியங்கள் இந்தியாவில் இல்லாதிருப்பதோடு, ஜாதி என்ற கட்டுப்பாட்டினால் ரொம்ப நிர்ப்பந்தமாயிருக்கிறதென்றும் சில பேர்கள் சொல்லுகிறார்கள். இந்த விதமான குறைகளை யெல்லாம் ராஜாங்கத்தார் பரிஹரிக்கவில்லை யென்று ராஜாங்கத்தின் பேரிலும் சிலபேர்கள் குற்றம் சொல்லுகிறார்கள். ஐரோப்பாவைப்பற்றி இவர்கள்கொண்டிருக்கிற அபிப்பிராயம் தவறானது. அங்கேயும் ஏழைகள் இருக்கிறார்கள். இன்னும் சொல்லப்போனால், லக்ஷக்கணக்கான ஜனங்கள் பிழைப்பில்லாமல் தவிக்கிறார்கள். அவ்வளவு திக்கற்றவர்கள் நம்முடைய தேசத்தில் கிடையாது. இந்த ஏழைகளை எப்படி முன்னுக்குக் கொண்டுவரலாமென்று, ஐரோப்பாவில் ஜெர்மெனி, இட்டெலி, ப்ரான்ஸ் தேசங்களில் ரெய்பீஸன், ஷு-ல்ஸ்டிலிட்ச், லூஸட்டி போன்ற அனேக மகான்கள், ராப்பகலாக யோசித்து, உழைத்துக், கடைசியாய் ஏழைகளைச்சேர்த்துக் கூட்டுறவுச் சங்கங்களாக உழைக்கச்செய்வதுதான் அவர்களுக்கு விமோசனத்தைத் தருமென்று கண்டு பிடித்தார்கள். வறுமைத்தனத்தால் உண்டாகும் கொடுமைகளுக்கெல்லாம் கூட்டுறவு உழைப்பே தகுந்த பரிஹாரமென்று கண்டறிந்தார்கள். ஆகையால் நம்முடைய தேசத்து வறுமையை நீக்க இந்த பரிஹாரத்தையே நாமும் கைக்கொள்ளவேணும்.

எந்த வியாபாரத்திலும் முதல் முதல் பரஸ்பர நம்பிக்கை வேண்டியது அவசியம். ஒருவன் பணத்தை மற்றொருவனிடத்தில் கொடுத்தால் மோசம் போகாது என்ற முழுநம்பிக்கை ஏற்படவேணும். மனித சுபாவம் எங்கும் ஒன்றேதான். ஏழைகள் தாங்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பணத்தை லாபமுண்டு என்று தெரிந்தாலுக்கூட, லகுவில் பிறரிடத்தில் கொடுக்கமாட்டார்கள். இந்த உண்மையை கிராம ஐக்கிய நாணய பாங்கிகளை நடத்தும் விஷயமாய் ஆதியில் ஒழுங்கு ஏற்படுத்தியவர்கள் மறக்கவில்லை. பாங்கியில் பணம் போட்டவர்கள், பணம் எப்படி செலவழிக்கப்படுகிறது என்பதைப் பார்த்து வரும்படியே ஐரோப்பாவில் ஏற்பட்டது.

இது போலவே நம்முடைய தேசத்து சட்டமும். கிராம ஐக்கிய நாணய பாங்கிகளின் விஷயங்களை எப்பொழுதும் கவனித்து வருவதற்காக அந்தப் பாங்கிகளின் மெம்பர்கள் அந்தந்த கிராமங்களில் குடியிருக்கிறவர்களாகவே யிருக்கவேணும். கிராமங்களில்

நடக்கும் விஷயங்கள் கிராமத்தில் குடியிருக்கிறவர்களுக்கு சுலுவாய்த் தெரிந்து விடும். ஆதலால் கிராம பாங்கிகளின் காரியங்கள் சரிவர நடக்காவிட்டால் அவைகளில் நடக்கும் க்ருத்ரமங்களும், ஊழல்களும் வெளிவந்துவிடும். ஆகையால் கிராமத்தார்கள் பாங்கி விஷயங்களில் கண் வைத்திருக்கிறார்களென்று ஏற்படவே, பாங்கிகளை நிர்வாகம் செய்கிறவர்கள் எப்பொழுதும் உஷாராயும் யோக்கியமாயும் நடந்துகொள்ளும்படியாய் ஏற்படுகிறது. ஆகவே மனிதன் சுபாவத்திலேயே யோக்கியனு யில்லாவிட்டாலும் இந்த பாங்கிகளின் மூலமாய் யோக்கியமாய் நடந்துகொள்ளவேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. இப்படிக்கு பரஸ்பரம் நம்பிக்கையை உண்டு பண்ணியும் பிறர் சொத்தை தன் சொத்துப் போல் பார்த்து வரும்படியும் செய்வதால் இந்த கிராம பாங்கிகளினுல் உண்டாகும் நன்மைகள் மகத்தானவைகள்.

நாம் பெரும்பாலும் விவசாயிகளே அல்லாமல் வர்த்தகர்களுமல்ல, கைத்தொழிலாளிகளுமல்ல. ஒவ்வொரு குடியானவனும் குடித்தனத்துக்கு வேண்டியவைகளை தன் நிலத்திலேயே விளைவித்துக்கொண்டு திருப்தி அடைகிறுன். இது வெகுகாலமாய் நடந்து வருகிற வழக்கம். ஆனுல் இப்பொழுது நம்முடைய தேசத்தில் நாளுக்குநாள் விருத்தியாகிவரும் ஜனப்பெருக்கத்தாலும், அந்நிய தேசத்தாருடைய பழக்கத்தாலும், வர்த்தமானப் பத்திரிகைகளை படிப்பதாலும், நாம் கைத்தொழில்களையும், வர்த்தகத்தையும் விசேஷமாய் கையாளவேண்டிய அவசியம் நேரிட்டிருக்கிறது:

நம்மவர்களில் அநேகம்பேர்கள், முக்கியமாய் இங்கிலீஷ் படித்தவர்கள், வியாபார விஷயங்களிலும், கைத்தொழில் விஷயங்களிலும், ஏதோ எண்ணிக்கொண்டு, எடுத்த உடனேயே ஆகாயத்தில் பறக்கவேணுமென்று நினைக்கிறுர்கள். இது முடியாதகாரியம். கைத்தொழில்களிலும், வியாபாரத்திலும், தேர்ச்சி அடைவதற்கு முன்னுல், எல்லாரும், அதிலும் முக்கியமாய் விவசாயிகளாயிருப்பவர்கள், அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் இரண்டுண்டு. அவைகளாவன :—

(1) தொழிலின் முறைமையும் (2) வர்த்தக நாணயத்தின் மகிமையும். இவை இரண்டையும் அறியாதவர்கள் வர்த்தகம், கைத்தொழில், இவைகளில் முன்னுக்கு வருவது கஷ்டமாகும்.

ஐக்கிய நாணய கிராம பாங்கிகளை நிர்வாகம் செய்வதினுல் வியாபாரம், கைத்தொழில் இவைகளைச் செய்வதற்கு தேர்ச்சி உண்டாகிறது. ஆனுல் அதிகத் தேர்ச்சி உண்டாவதற்கு இந்த பாங்கிகளின் விஷயமாக சில சீர்திருத்தங்கள் செய்யவேணும்.

1. ஒவ்வொரு பாங்கிக்கும் ஒரு ரிஸர்வ் பண்டு, அதாவது, சிறுகச்சிறுக லாபத்திலிருந்து மிகுத்துவைக்கப்பட்ட ஒருநிதி, ஏற்படவேண்டும். இந்த ரிஸர்வ் பண்டுதான் நஷ்டம் வருகிற சமயங்களில் பாங்கியைத் தாங்கும்.

2. மேலே சொல்லிய ரிஸர்வ் பண்டு ஒருநாளும் மூழ்கிப்போகக்கூடாமல் அதை ப்ரைவேட் பாங்கிகளிலும் அல்லது வேறு ஐக்கிய நாணயப் பாங்கிகளிலும் போடாமல், தகுந்த சொத்துக்களின் பேரில் போட்டுவைக்க வேண்டியது.

3. ஒவ்வொருவரும் சிக்கனமாய், அதாவது, செட்டாய்ச் செலவுசெய்யக் கற்றுக்கொள்ள வேண்டும். நாம் பரம்பரையாய் சில சுபாசுபங்களில் செய்துவரும்செலவை செட்டு என்று சொல்லமுடியாது. கொஞ்ச வருஷ முன்வரைக்கும் கல்யாணம் போன்ற சமயங்களில் பந்துக்கள் மோதரப் பணம் அல்லது

மொய்ப்பணம் போடவேணுமென்ற வழக்கம் இருந்தது. இந்தப் பணங்களெல்லாம் சேர்ந்து கல்யாணம் செய்கிறவர்களுக்கு கொஞ்சம் சௌகரியமாயிருந்தது. இப்பொழுது அந்த வழக்கம் நின்றுபோய்விட்டது. ஆனாலும் கல்யாணம் பண்ணுகிறவன் செலவைக்குறைக்க முடியாமல் வழக்கம்போல் கையிலிருந்தோ, கடன் வாங்கியோ செலவுசெய்ய வேண்டியதாக இருக்கிறது. இப்படிச் செலவு செய்ய வேண்டியதாயிருப்பது கஷ்டந்தானென்று ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆகையால் கிராமத்தார்கள் எல்லாரும் சேர்ந்து ஒவ்வொருவனுடைய அந்தஸ்தையும் பார்த்து அவனவன் இவ்வளவுதான் செலவழிக்கலாமென்று போதிக்க வேணடும்.

இப்படிப்பட்ட செலவுகளுக்கு கிராம பாங்கிகளிலிருந்து கடன் கொடுக்கக்கூடாது. அவைகளிலிருந்து கடன் வாங்கி செலவழிப்பதினால் லாபம் உண்டென்று தெரிந்தாலொழிய, கடன் கொடுப்பதில்லையென்று கிராம பாங்கிகளில் ரூல் ஏற்பட்டிருக்கிறது. கல்யாணத்துக்குச் செலவாகும் பணம் லாபத்தைக் கொடுப்பதில்லை. ஆகையால் கல்யாணச் செலவுக்காக கிராம பாங்கிகளிலிருந்து பணம் கொடுக்கக் கூடாதென்று ஏற்படுகிறது.

4. கிராம பாங்கிகள் நாளடைவில்தங்கள் வட்டி விகிதத்தைக் குறைக்க முயலவேண்டும். ஐரோப்பாவில் சில தேசங்களில் கடன் கொடுக்கிறவனுக்கு வருஷத்துக்கு மூன்று வட்டி கிடைத்தால் அவன் எவ்வளவோ சந்தோஷமாய்க் கடன் கொடுப்பான். கிராம பாங்கிகளால் ஏற்பட்டிருக்கும் ஒரு பெரிய நன்மை அவைகள் சாவ்காரர்களைவிட குறைந்த வட்டிக்குக் கடன் கொடுப்பதே. கிராம பாங்கிகளின் வட்டி வீதம் 100க்கு $9\frac{1}{2}$ யாய் இருக்கிறது. இந்தப்பாங்கிகளை சரிவர நடத்திவரும் பக்ஷத்தில் 6 வட்டிக்கும் அதற்குக் குறைத்தும் கடன் கொடுக்கக் கூடும்.

எல். டி. ஸ்வாமிக்கண்.

## SOME AGRICULTURAL QUESTIONS.

BY THE EDITOR.

## சில விவஸாய விஷயங்கள்.

நாளது மார்ச்சுமீ" 12வ யன்று நம்முடைய ராஜதானிச் சட்ட நிருபண ஸபையின் மீட்டிங் ஒன்று நடந்தது. அந்த மீட்டிங்கில் விவஸாயத்துக்கு சம்பந்தமான அடியில்கண்ட விஷயங்களைப்பற்றி மெம்பர்கள் கேள்விகேட்க, கவரன்மெண்டார் பதில் சொன்னார்கள். கனம் பி. கேசவப்பிள்ளை கிராமத்தார்களுக்கு உபயோகப்படக்கூடிய காடுகளைப்பற்றி பின் வருமாறு கேட்டார்:—

பாரஸ்டு (காடு) ஆக்ட்டுப்படி கிராமத்தார்களுக்கு உபயோகப்படக்கூடிய காடுகளை வளர்த்துப்பார்த்து அவைகளை நிறுத்தினதுண்டா? அப்படியானால் எப்பொப்பொ? எந்தெந்த இடங்களில் அப்படியாயிற்று?' அவைகளை நிறுத்திவிடும்படி ஏற்பட்ட காரணங்கள் என்ன?.

இந்தக் கேள்விகளுக்கு பின்வருமாறு பதில் சொல்லப்பட்டது. செங்கல்பட்டு ஜில்லாவில் கிராமத்தார்கள் உபயோகத்திற்கென்றே அனேக இடங்கள் பிரத்தியேகமாக ஒதுக்கி வைக்கப்பட்டன. நெல்லூர் ஜில்லாவில் சேகடா என்று சொல்லப்பட்ட எல்லாமாடுகளும் மேயக்கூடிய மேய்ச்சல் ஸ்தலங்களும் இருக்கின்றன. இப்படிப்பட்ட இடங்களிலுள்ள மரஞ்செடிகளெல்லாம், அடியோடு போய்விட்டன. இதே மாதிரியாக இதர ஜில்லாக்களிலும் செய்து பார்த்திருக்கிறோம். ஆனால் அவைகளைபற்றிய விவரங்களை இப்பொழுதே சேகரித்துச்சொல்லுவதற்கு அவகாசமில்லை. கிராமங்களை ஒட்டி காடுகளை வைத்துக் காப்பாற்றுவதின் தாத்பரியம் கிராமத்தார்கள் தங்களுக்கு வேண்டிய

விறகு, மரம், மட்டைகளை எடுத்துக் கொள்வதற்காகவும், மாடுகளை மேய்த்துக்கொள்வதற்காகவுமே. இவைகளுக்காக வேறு சில காடுகளை சில அற்ப நிபந்தனைக்கு உள்பட்டு கிராமத்தார்கள் உபயோகித்துக் கொள்ளலாம். ஆகையால் கிராமங்களை ஒட்டிக் காடுகளை பிரத்தியேகமாக வளர்த்து கிராமத்தார்கள் உபயோகத்துக்கென்றே அவைகளை ஒப்பிவிக்கும் வழக்கம் நிறுத்தப்பட்டது. கிராமத்தார் வசம் ஒப்பிவித்த காடுகளில் மரங்கள் அற்றுப்போனதினாலேயே காடுகளை வளர்த்துக் கிராமத்தார் வசம் ஒப்பிவிப்பது பிரயோஜனமில்லாத காரியமென்று ஏற்படுகிறது. கனம் கேசவப்பிள்ளை கேட்ட கேள்விகளுக்குக் கவரன்மெண்டார் இந்த மாதிரி பதில் சொன்னார்கள்.

மேலே சொன்ன பதிலில் கவரன்மெண்டாரைக் குற்றம் கண்டுபிடிக்க இடமில்லை. நாமே யோசித்துப் பார்ப்போம். கிராம சமுதாய விஷயங்களெல்லாம் சரிவர நடந்து வருகின்றனவா? ஏதோ இங்கே அங்கே தவிர மற்றக்கிராமங்களிலெல்லாம் வாயாடியோ, வாசாலகனோ, பெரியமிராசுதாரோ, யாராயினும் ஒருவன் சமுதாயப்பணங்களை வசூல் செய்து கிராமத்தார்களுக்கு கணக்குச் சொல்லாமல் சொந்த உபயோகத்திற்கோ, அல்லது வேறு உபயோகங்ளுக்கோ, பொது வரும்படியை செலவழித்து விடுகிறான். இது நாம் தினம் பார்க்கிற விஷயம். எல்லாருக்கும் பாத்தியமுள்ள சொத்து என்றால் ஒவ்வொருவனும் அதிலிருந்து எவ்வளவு சுரண்டிக்கொள்ளலாமோ அவ்வளவையும் சுரண்டிவிடுவான். இது சாமான்ய ஜனங்களின் ஸ்வபாவம். அதிலும் தற்காலத்தில் ஒவ்வொருவனுக்கும் ஜீவனம் நடக்கிறதே கஷ்டமாயிருப்பதால் பொதுஜன நன்மையைப் பற்றி கவனிப்பவர்கள் எத்தனைபேர்கள்?

கனம் காமேஸ்வர ராவ் நாயுடு பின்வருமாறு கேள்வி கேட்டார்:—கவரன்மெண்டுக்கு மனுச் செய்துக்கொள்ளாமல் புன்செய் நிலத்துக்கு ஜலம் பாய்ச்சினதாகக் கர்ணம் அடங்கல் கணக்கில் எழுதிக் கொள்ளும்போது, அப்படி எழுதிக்கொண்டதைப் பட்டாதாரனுக்கு உடனே அறிவிப்பதுண்டா? பட்டாதாரனை வைத்துக்கொண்டு நிலத்தைப் பரிசோதிப்பதுண்டா? கர்ணம் எழுதிக்கொண்டதைச் சரிபார்க்க ரெவெனியூ இன்ஸ்பெக்டர் தாமசமில்லாமல் நிலத்தை வந்துபார்ப்பதுண்டா? ஜமாபந்தியானபிறகு தண்டத்தீர்வையைச் சேர்த்து டிமாண்டு நோட்டீஸ் வரும்போது பட்டாதாரனுக்கு அப்படி விதித்ததாகத் தெரிகிறதைத் தவிர அவனுக்கு முன்னதாக அறிவிப்பதுண்டா? பட்டாதாரன் அப்பீல் செய்துகொண்டால் கர்ணனுடைய கணக்கையும் ரெவெனியூ இன்ஸ்பெக்டருடைய ரிப்போர்ட்டையும் வைத்துக்கொண்டு இந்த அப்பீலைப் பைசல் செய்வது வழக்கமா? புன்செய் நிலத்துக்கு ஜலம் பாய்ச்சினதாகக் கர்ணன் கணக்கெழுதும்போது கிராமத்திலுள்ள சில தக்க மனிதர்களை வைத்துக்கொண்டு நிலத்தைப் பரிசோதிக்க வேண்டுமென்றும், ஒவ்வொரு கிராமத்திலும் இந்த மாதிரியான தக்க மனிதர்களை டிவிஷனல் ஆபீஸர் முன்னதாகவே குறிப்பிட்டு வைக்கவேண்டுமென்றும், கவரன்மெண்டார் உத்திரவு செய்வார்களா?

இதற்கு கவர்ன்மென்டார் சொன்னபதில்:—இந்தமாதிரி திருச்சினாப்பள்ளி ஜில்லாவில் செய்துபார்த்து அது வீண் தாமசத்துக்குக் காரணமானதால் நிறுத்தப்பட்டுப்போயிற்று. நிலத்தைக் கர்ணன் பரிசோதிக்கும்போது, பட்டாதாரனை வைத்துக்கொண்டே செய்வதில்லையாயினும், அவன் கூடயிருப்பதால் ஆட்சேபமில்லை. ரெவெனியூ இன்ஸ்

பெக்டர் தாமசமில்லாமல் கர்ணன் எழுதின கணக்கு சரியா என்று பார்ப்பது கடமை. அப்படி அந்தக்கடமையைச் செலுத்துகிருனுவென்று பார்ப்பது தாசில்தாரின் கடமை. எந்தச் சமயத்தில் வேண்டுமானுலும் அப்போது வில்லேஜ் கணக்குகளைப் பட்டாதாரன் பார்த்துத் தனக்குச் சம்புந்தமான கணக்குகள் சரியாயெழுதப்பட்டிருக்கின்றனவா என்று தெரிந்துகொள்ளக்கூடும். அப்படிச் செய்வதால் தன் நிலத்துக்கு எந்த மாசத்திலாவது ஜலம் பாய்ச்சினதாக எழுதப்பட்டிருக்கிறதா, மேலான அதிகாரிகளிடத்திலிருந்து என்ன உத்திரவு வந்திருக்கிறது, என்பதை அறிந்து கொள்ளலாம். ஜமாபந்தி நடக்கும்போது ரயத்துகள் வந்திருந்து 6-ம் நம்பர் கணக்குகளைப்பற்றி செய்திருக்கும் உத்திரவுகளை ஜமாபந்தி ஆபீஸர் விவரித்துக்காட்டும்போது அவர்கள் ஆட்சேபங்கள் செய்தால் அவைகளைக்கேட்பதுஅந்த ஆபீஸரின்கடமை. அப்பீல்களைப் பைசல் செய்வதில் கர்ணனுடைய கணக்குகளும் ரெவெனியூ இன்ஸ்பெக்டருடைய கணக்குகளும் சாமானியமாய் ஆதாரமாயிருந்தாலும் வேறு ஆதாரமிருந்தால் அதையும் கவனிக்கலாம். அக்கம்பக்கத்து ரயத்துகளைக்கேட்டும் தாசில்தாரும், டிவிஷனல் ஆபீஸரும், ரெவெனியூ இன்ஸ்பெக்டருடைய வேலையைத் தணிக்கை செய்வதற்காக சோதனையும் அல்லது இந்த அப்பீல்களுக்காக விசாரணையும் செய்தால் அவைகளில் ஏற்படும் விஷயங்களை ஆதரவாகக்கொண்டும் ஜமாபந்தி ஆபீஸர் அப்பீல்களைப் பைசல் செய்யலாம். கிராமத்தில் தக்கவர்களை வைத்துக்கொண்டு கர்ணன் நிலத்தைப் பரிசோதிக்க வேண்டுமென்பது அனுபோகத்தில் நடவாது. இவ்வாறு கனம் காமேஸ்வர ராவ் நாயுடு கேட்க, பதில் சொல்லப்பட்டது.

கனம் காமேஸ்வர ராவ் நாயுடு நூதன விவசாய முறைகளைப் பரவச்செய்யும் விஷயமாக பின்வருமாறு கேட்டார். எங்கெந்த ஜில்லாக்களில் எத்தனைப் பரிசோதனைப்பண்ணைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. சென்ற மூன்று வருஷங்களுக்கு அவைகளுக்கான வரவு செலவு என்ன? கர்ணங்களை ஸர்வே ஸ்கூல்களுக்கு அனுப்பி ஸர்வே சொல்லிக் கொடுப்பதுபோல கிராம முன்சீப்களுக்கு வருஷத்திற்கு 15 நாளைக்கு விவஸாயத்தில் நூதனமுறைகளைச் சொல்லிக்கொடுத்து அவர்கள் மறுபடியும் தங்கள் தங்கள் ஊர்களுக்குப்போய் கிராமத்தார்களுக்குப் பிரயோஜனப்படும்படிச் சொல்லச்சொல்வது முடியுமா?

இதற்கு பின்வருமாறு கவரன்மெண்டார் பதில் சொன்னுர்கள்.

அங்கங்கேயுள்ள விவஸாய சோதனைப் பண்ணைகளையும் அவைகளுக்கான வரவு செலவுகளையும் காட்டும் ஒரு ஸ்டேட்மெண்டு தயார் செய்து கொடுக்கிறோம்.

நூதன விவஸாய முறைகளைப் பரவச்செய்வது கிராமமுன்சீபுகளின் கடமையல்ல. அவர்களுக்கு 15 நாளைக்கு நூதன விவஸாய முறைகளைப் போதிப்பதினுல் பிரயோஜனமுண்டாகுமென்று தோன்றவில்லை.

கனம் பெர்ராஜு பந்துலு அவர்கள் கேட்ட கேள்வியாவது:—1907-08, 1908-09, ஆகிய இந்த இரண்டு வருஷங்களிலும் ஸர்க்கார்ப் பரிசோதனைப்பண்ணைகளில் செய்து பார்த்து நல்ல முறைகளென்று ஏற்பட்ட விஷயங்களை விவரித்து எத்தனைத் துண்டுப்பத்திரிகைகள் தமிழிலும், தெலுங்கிலும் பிரசுரம் செய்யப்பட்டன. அந்தப் பத்திரிகைகளை எல்லா கிராம அதிகாரிகளுக்கும், ஸ்கூல்மாஸ்டர்களுக்கும் அனுப்புவீர்களா? அந்தப்பத்திரி

கைகள் விவசாயிகளை எட்டி ஏறும்படியான ஏற்பாடுகள் செய்வீர்களா? என்றுகேட்டதற்கு அடியில் கண்டபடி பதில் சொல்லப் பட்டது.

1907-08ம் வருஷத்தில் ஜ-ூட் (ஒரு வித சணல்) சாகுபடியைப்பற்றி தமிழில் ஒரு துண்டுப்பத்திரிகை போடப்பட்டது. 1908-09ம் வருஷத்தில் "சீமை அத்தி" சாகுபடியைப் பற்றி தமிழிலும், தெலுங்கிலும் ஒரு பிரசுரமும், மணிலாக்கொட்டைசாகுபடியைப்பற்றி தெலுங்கில் ஒரு பிரசுரமும், திருநெல்வேலி ஜில்லா சிவகிரி ஜமீன் பண்ணையில் ஏற்பட்ட நெல் சாகுபடியில் சில நூதன முறைகளைப் பற்றி தமிழ், தெலுங்கு, மலேயாளம், கன்னடம் ஆகிய இந்த நாலு பாஷைகளில் பிரசுரங்களும் செய்யப்பட்டன. இவைகளைத்தவிர நெல் விதைத்தல், பசுந்தாள் உரம், விதை பொறுக்கி எடுத்தல், பருத்தி சாகுபடி ஆகிய இவைகளைப்போன்ற முக்கியமான விவசாய விஷயங்களைப்பற்றி விவசாய இலாகா உத்தியோகஸ்தர்கள் குறிப்புகள் எழுதி தமிழ், தெலுங்கு போன்ற ஸ்வதேச பாஷாபத்திரிகைகளுக்கு அனுப்பினதோடு அவைகளைத் துண்டுப் பத்திரிகைகளாகவும் பிரசுரம் செய்தார்கள். 1908-09ம் வருஷம் முதல் விவசாய பஞ்சாங்கம் என்பதாக இங்கிலீஷ், தமிழ், தெலுங்கு, இந்த பாஷைகளில் வருஷாவருஷம் ஒரு புஸ்தகம் பிரசுரமாகிவருகிறது. இதில் விவசாய இலாகாக் காரர்கள் நல்ல முறைகள் என்று கண்டறிந்த விஷயங்களை எடுத்துச் சொல்லுவதோடு விவசாயிகளுக்கு அவர்கள் என்ன விதமாக ஒத்தாசை செய்யக்கூடும் என்பதையும் காட்டியிருக்கிறார்கள். பிரசுரம் செய்யும் பத்திரிகைகளை விவசாய இலாகாக்காரர்கள் வேண்டியவர்களுக்கு இனாமாகக் கொடுக்கிறார்கள். இந்த ராஜதானியிலுள்ள ஒவ்வொரு ஸ்கூலுக்கும் விவசாய பஞ்சாங்கம் அனுப்பப்பட்டிருக்கிறது. அதை கிராம உத்தியோகஸ்தர்களுக்கும் அனுப்புவதைப்பற்றி யோசனையிலிருக்கிறது. இந்த விதமாக கனம் பேர் ராஜு பந்துலு கேட்ட கேள்விகளுக்கு கவரன்மெண்டார் பதில் சொன்னார்கள்.

"பிழைக்கும் வழி" யில் போன வருஷம் மார்ச்சுமாஸம் முதல் ஒற்றை நாற்று நடுதலைப்பற்றி பிரசுரமாகிவரும் வியாஸங்களைச் சுட்டிக்காட்டி கனம் டி. வி. சேஷகிரி அய்யரவர்கள் பின்வருமாறு கேட்டார்.

சென்னை ராஜதானியில் ஒவ்வொரு ஜில்லாவிலும் எவ்வளவு ஏகராவில் ஒற்றை நாற்று நடுகை ஆகிறது. ஒற்றை நாற்று நடுதலைப் பற்றிக் குடித்தனக்காரர்களுக்கு போதிப்பதற்காக சிலபேர்களை நியமித்து அவர்கள் ஊர் ஊராய்ப் போய் பிரசங்கம் செய்யும்படி செய்வீர்களா? ஒற்றை நாற்று நடாத இடங்களில் ஒற்றை நாற்றை நடும்படி அங்கங்கேயுள்ள தாசில்தார்களையும் ரெவின்யூ இன்ஸ்பெக்டர்களையும் கொண்டு நிலக்காரர்களுக்குச் சொல்லும்படி செய்வீர்களா?

இந்தக் கேள்விகளுக்கு கவரன்மெண்டார் பின்வருமாறு பதில் சொன்னார்கள்.

ஒற்றை நாற்றாக நடுவதால் உண்டாகும் பயன் எங்களுக்கு நன்றாய்த் தெரியும். அதை கிருஷிகர்களுக்குத் தெரிவிக்க தக்க ஏற்பாடுகளும் செய்து வருகிறோம். 1908-09ம் வருஷத்தில் சிவகிரி பண்ணையின் சூபரின்டெண்டெண்ட் திருநெல்வேலி ஜில்லாவில் பல இடங்களில் இதைப்பற்றி பிரசங்கங்கள் செய்தார். இந்த நூதன முறையை இன்னும் எந்த விதமாகப்பரவச் செய்யலாம் என்பதைப்பற்றி விவஸாய இலாகா உத்தியோகஸ்தர்களை இன்னும் யோசனை செய்யச்சொல்லுகிறோம்.

என்று கனம் சேஷகிரி அய்யர் அவர்களுக்குப் பதில் சொன்னூர்கள்.

குடிகளுக்குள்ளே நூதன விவாஸாயமுறைகளை எப்படிப் பரவச்செய்கிறது என்பதைப் பற்றி பலபேர்கள் பலவிதமாகச் சொல்லுகிருர்கள். சிலபேர்கள் நூதன முறைகளை விவரமாய் எழுதி துண்டுப்பத்திரிகைகள் அச்சிட்டு குடிகளுக்குக் கொடுக்கவேணுமென்று சொல்லுகிருர்கள். சிலபேர்கள் அனேகம் குடிகளுக்கு எழுதப்படிக்கத் தெரியாது, அவர்களுக்கு புஸ்தகத்தைக் கொடுத்தால் பிரயோஜனமில்லே, நேரில் போய்ச்சொல்லவேண்டும் என்று சொல்லுகிருர்கள். இன்னும் சிலபேர்கள் நூதன முறைகளைப் புஸ்தக மூலமாய்ச் சொன்னுலும் நேரில் போய்ச்சொன்னுலும் விவசாயிகள், சொல்வதை லகுவில் நம்பமாட்டார்கள். ஆகையால் நூதன முறைகளை ஒவ்வொரு இடத்திலும் ப்ரத்தியக்ஷமாகப் பண்ணிக்காண்பித்து அவைகளின் பயனை அவர்களுக்கு நிதர்சனமாய் ரூபிக்கவேணுமென்று சொல்லுகிருர்கள். இந்த விஷயங்களைப்பற்றி எழுதுவதற்கு இடமில்லாததால் இன்னெரு ஸஞ்சிகையில் விசாரிப்போம்.

பத்திராதிபர்.

## BANKU PADDY.
## பாங்கு நெல்லு

கார்த்திகை மாஸத்துப் 'பிழைக்கும் வழி'யில் 'பாங்கு நெல் சாகுபடியில் ஒரு பரீக்ஷை' என்னும் வியாஸத்தில் அந்த நெல் கார்நெல்லே விட மூன்றில் ஒன்று அதிகம் கண்டதென்றும், அது அறுப்புக்குக்கொஞ்சம் பிந்தியதென்றும், ஆகையால் அதை தாளடி, அதாவது, இரண்டாம் போகமாகப்போட்டுப் பார்க்க வேண்டுமென்றும் எழுதப்பட்டிருக்கிறது. பாங்குப் பயிர் காய்ச்சல் தாங்கும். மழையைத் தாங்காது. இரண்டாம் போகமாக நடும்பக்ஷத்தில் ஐப்பசி கார்த்திகை மாஸத்து அடைமழையில் அகப்பட்டுப் பயிர் நன்ருய் வராதென்று நாம் விசாரித்ததில் சிலபேர்கள் சொல்லுகிருர்கள். இது விஷயமாய் பரீக்ஷை செய்தவர்கள் இருந்தால் அவர்கள் தங்களுடைய அனுபவத்தைத் தெரிவிப்பார்களென்று நம்புகிருேம். பாங்கு நெல்லின் விசேஷத்தை போன சித்திரை மாஸத்து ஸஞ்சிகையில் சொல்லி யிருக்கிருேம்.

## THE CATTLE OF SOUTHERN INDIA
BY
C. RAMASWAMI AIYANGAR, B.A.
## தென்னிந்தியா மாடுகள்

"வானமழைபொழிந்தாலும், வளம்படுவதெவராலே,
ஞானமறை யவர்வேள்வி நலம் படுவதெவராலே
சேனைகொடு பொரு மன்னர் செருக்களத்திற் செகுக்குமத
யானை வலி எவராலே இவரொருத்தின்வலியாலே."
—கம்பர்.

இந்தியா தேசத்திலிருக்கும் ஜனங்கள் விசேஷமாய் விவசாயத்தினுல் ஜீவிக்கிருர்கள். விவசாயத்திற்கு முக்கியமாய் வேண்டியவைகளில் எருது ஒன்று. ஏர் உழுவதற்கும், கிணற்றிலிருந்து கவலேபோட்டுத் தண்ணீரிறைத்து வயல்களுக்குப் பாய்ச்சுவதற்கும், பரம்படிப்பதற்கும், தானியங்களை வியாபார ஸ்தலங்களுக்குக் கொண்டுபோய் விற்பனை செய்வதற்கும் எருதுகளுடைய உதவி அவசியம். அவைகளின் சாணி வயலுக்கு வளப்பத்தைக் கொடுக்கக்கூடிய முக்கிய உரமாகிறது. குடித்தனக்காரர்களுக்கு எருதுகள் பெரிய தனம். இவைகளை அவர்களுக்கு கண்ணென்று சொல்லலாம். இந்த தனத்தைத் தேடுவதும் அதை காப்பாற்றுவதும் அவர்களுடைய ஒரு பெரிய கடமையாகும்.

அப்படியிருக்க, இப்பொழுது கிராமங்களில் குடித்தனக்காரர்கள் எருது பரிபாலனஞ் செய்வதில் விசேஷ கவனம் வைக்கிறதில்லே. தங்களுக்கு முக்கிய ஆதாரமாகிய மாடுகளை வாங்காமலும், வாங்கியும் அவைகளுக்கு வயிறு நிரம்பத் தீனி போடாமலும் தங்கள் உழவுத்தொழிலே அசட்டைசெய்கிருர்கள். கொஞ்சம் தவிட்டினுலும், கொஞ்சம் வைக்கோலினுலும் ஜீவிக்கும் எருதுகள் வேலேயில் எப்படிச் சுறுசுறுப்பாயிருக்கக்கூடும்? நல்ல எருதுகளை வாங்கி அவைகளைத் தக்க

படி போஷித்தால் விவசாயிகளுக்கு ஜீவனம் கஷ்டமில்லாமல் நடக்கும். எங்கெந்த இடங்களில் நல்ல எருதுகள் அகப்படுமென்பதையும் அவைகளின் குணகுணங்களையும் சுருக்கமாகச் சொல்லுவோம்.

சென்னைராஜதானியில் சில சில இடங்களில் வளரும் எருதுகள் மிகப்பிரசித்தி பெற்றவைகள். இந்தராஜதானியிலும் இதற்கு வெளியேயுள்ள அநேக தேசங்களிலும் அவைகளை ஜனங்கள் கொண்டாடுகிறார்கள். மைசூர், நெல்லூர், ஆலம்பாடி, காங்கெயம், புலிக்குளம் என்று சொல்லப்பட்ட எருதுகளை சந்தைகளில் அதிக விலை கொடுத்து வாங்க ஜனங்கள் பின்வாங்க மாட்டார்கள்.

மைசூர் மாடு—இது ரொம்ப பேர் போனது. மைசூரில் இதை நாட்டுதனம், தொட்டதனம் என்று இரண்டு வகையாகப் பிரித்திருக்கிறார்கள். நாட்டுதனத்தை லேசான பயிர்வேலைக்கு உபயோகப் படுத்துகிறார்கள். அமிர்த மஹால், ஹல்லிக்கார், ஆலம்பாடி, இந்த ஜாதிகளுக்கெல்லாம் தொட்டதனம் என்றுபெயர். இவைகள் உயரத்திலும், நிறத்திலும் ஒழுங்கானவைகள், சவாரிக்கும் பார வண்டி இழுப்பதற்கும் முக்கியமாய் உபயோகப்படுகின்றன. இந்த எருதுகளை பணக்காரரிடம் காணலாம். அமிர்தமஹால் எருதுகள் சண்டையில் ராணுவ சாமான்களைக் கொண்டு போவதில் அதிக துரிதம் என்று கீர்த்தி பெற்ற சேனாதிபதியாகிய வெல்லிங்டன் பிரபு அடிக்கடி புகழ்ந்திருக்கிறார். காலாட்படைகளைவிட வேகமாய்ச்செல்லும். இது அதிக சுறுசுறுப்பும், ரோஷமுமுள்ள ஜாதி. மிகப் பாரமான வண்டிகளை வெகு தூரம் இழுக்கும். எருது ஒன்று 80 ரூபாய் முதல் ரூபாய் 130 வரையில் விலைபோகிறது. கொஞ்ச நாளைக்கு முன் ஹைதராபாகத்தில் இந்த ஜாதியில் ஒரு ஜோடி மாடு ரூபா 800-க்கு ஒருவர் வாங்கினதாகக்கேள்வி.

ஆலம்பாடி மாடுகள்—இவைகள் காவேரி நதியின் கரையிலுள்ள ஆலம்பாடி கிராமத்தில் விசேஷமாய் வளர்க்கப்படுவதால், அவைகளுக்கு அந்தப்பெயர். கோயம்புத்தூர், சேலம், ஜில்லாக்களுக்கும் மைசூர் மாகாணத்திற்கும் இடையிலுள்ள காவேரிஆற்றின்இருபுறங்களிலுமுள்ள செழிப்பான காடுகளில் இவைகள் திரள் திரளாயிருக்கின்றன. இந்த மாடுகளை மந்தை மந்தையாய் வாங்கி, கோலார், மைசூர், பெங்களூர் ஜில்லாக்களிலுள்ள செழிப்பான மைதானங்களில் மேய்த்து வளர்த்து விற்கிறார்கள். இங்கேயிருந்துதான் சிங்கப்பூர், பினாங்கு முதலிய வெளி நாடுகளுக்கு அனுப்புகிறார்கள். தென்னிந்தியாவில் முக்கியமாய் வண்டி யிழுக்கும் மாடுகளும் இவைகளே. மைசூரிலுள்ள அமிர்த மஹால் மாடுகளைப்பார்க்கிலும் உருவத்தில் சிறிதாயும் பருமனுமிருக்கும்.

நெல்லூர் மாடு—இது இந்தியா முழுவதும் மிகப்பிரசித்திபெற்றது. இதுபார்வைக்குவெகு பெரிதாயும் காம்பீரமாயுமிருக்கும். குண்டூர் ஜில்லாவில் ஒங்கோல் தாலூகாவில் இதை விசேஷமாய்க்காணலாம். மழை இல்லாமல் விளைவு குறைந்து வருத்தப்படும் குடித்தனக்காரர்கள் இந்த ஜாதி மாடுகளை கூட்டம் கூட்டமாய் விற்பதற்காகவே வளர்க்கிறார்கள். இதுவே அவர்களுக்கு முக்கிய ஜீவனம். கன்றுகளை வெகு சிரத்தையோடு கவனிக்கிறார்கள். ஆகையால்தான் இந்த மாடுகளை ஜனங்கள் தேடுகிறார்கள். இவைகளைப் பரிபாலித்து விற்பதில் அதிக லாபம் கிடைக்கிறது. நல்ல கன்றுகள் 80 ரூபாய் முதல் ரூபாய் 250 வரையில் விலை போகின்றன. அமெரிக்காவைச் சேர்ந்த பிலிப்பயன் தீவுக்கு இந்த மாடுகளில்

சில அனுப்பப்பட்டிருக்கின்றன. அந்தத்தீவில் கொஞ்சகாலமாகக் கொண்டுவரப்பட்ட எல்லா மாடுகளேக்காட்டிலும் ஓங்கோல்மாடுகள் அதிக சிரேஷ்டமானவைகளென்பது அந்தத் தீவு துரைத்தனக்காரர் அபிப்பிராயம். அந்த தீவுகளில் இந்த மாடுகளே அனேக ஜனங்கள் மிகவும் கொண்டாடுகிருர்கள் என்று தமக்குக் கடிதம் வந்ததாக ஓங்கோலில நடந்த கால்நடைக் காக்ஷியில் விஜயம் செய்திருந்த கனம் காவில் ஸ்வேர்ட் துரை அவர்கள் சொன்ஞர். நல்ல பசு ரூபாய் 80 முதல் ரூபாய் 150 வரையில் அது கறக்கிற பாலுக்குத் தக்கபடி விலேயாகிறது. மைஸூர், ஆலம் பாடி மாடுகளேப்போல நெல்லூர் எருதுகள் அவ்வளவு அதிக சுறுசுறுப்பில்லாவிட்டாலும், பளுவான சுமைகளே இழுப்பதற்கு இந்த ஜாதி மாடுகள் மிகவும் உபயோகமானவை.

காங்கேயம் மாடு—கோயம்புத்தூர் ஜில்லாவின் தென்பாகத்திலும் தென்கிழக்குப் பாகத்திலுமுள்ள தாலூக்காக்களில் விசேஷமாய் இவைகளே வளர்க்கிருர்கள். இந்த மாடு பெரியதென்றும், சிறியதென்றும் இரண்டுவகை உண்டு. இவைகள் காங்கேயம் தாலூகாவில் அதிகமாய் வளர்க்கப்படுவதால் இவைகளுக்கு இந்தப்பெயர். இந்த மாடு வாங்கப் பிரியப்படுகிறவர்கள் மாடு இருக்கும் இடத்தைத்தேடிவர வேண்டும். சாதாரண சந்தைகளில் அகப்படாது. ஆனல் சில பெரிய சந்தைகளில் கிடைக்கும். இந்த ஜாதி மாடுகள் பலமும் சுறுசுறுப்புமுள்ளவைகள்.

புலிக்குளம் அல்லது ஜெல்லிக்கட்டுமாடு—இது மதுரை ஜில்லாவில் விசேஷம். பார்வைக்கு சிறிதாய்த்தோன்றினும் வெகு சுறுசுறுப்புடையது. சிரமத்தினல் தளர்ச்சி யடையாது. மதுரை ஜில்லாவில் அனேக இடங்களில் நடக்கும் ஜெல்லிக்கட்டு என்னும் வேடிக்கைக்கு இந்த மாடுகளேயே தேடுகிருர்கள். இவைகளுக்கும், காங்கேயம் மாடுகளுக்கும் அதிக வித்தியாசமில்லே. விசேஷமாய் வண்டிகளில் பூட்டப்படும் மாடுகளும் இவைகளே. ஓய்வில்லாமல மணிக்கு சுமார் 5 அல்லது 6 மைல் விதம் வெகு தூரம் போகும். இந்த ஜாதிப் பசு அதிக பால் கறக்காது.

வி. ராமஸ்வாமி அய்யங்கார்.

## MINING ENTERPRISE
BY
T. M. SUNDARAM AIYAR.

## சுரங்கமறுத்தல்.

தாது வர்க்கங்கள் விஷயத்தில் உலகத்திலுள்ள அநேக தேசங்களேப் பார்க்கிலும் இந்தியா தேசம் மிகச்சிறந்ததென்று சொல்லவேண்டும். பூஸாரமும் தாதுக்களின் ஸமுர்த்தியும் பெரிய காடுகளும் நதிகளும் இந்தியா தேசத்தை பல விதமாக மேன்மைப் படுத்துகின்றன. ஆகையால் இந்தியா முன்னுக்குவர சாஸ்திரீயமாக பரிசோதனே செய்பவர்களும், யுக்தி, பொறுமை, உழைப்பு, முயற்சி ஆகிய நல்ல குணங்களுள்ள தனவான்களுந்தான் தேவை.

பலவித முயற்சிகளில் ஒன்ருகிய உலோகங்களுக்காக சுரங்கம் வெட்டுவது அதிக லாபம் தரத்தக்க தொழிலென்று நம்மவர்களுக்குத் தோற்றுவதில்லே. இந்தத் தொழில் இந்த தேசத்தில் மிகுந்த தாழ்ந்த நிலேமையிலிருக்கின்றது. சுரங்கம் எடுத்து வேலே செய்யும் நம்மவர்களுக்கு சுரங்கம் வெட்டுவதும் உலோகத்தைத் துண்டிப்பதும் அவைகளே அப்படியே அந்நிய தேசங்களுக்கு அனுப்புவதும்தான் தெரியும். அந்த உலோக சத்துக்கள் எவ்வித வேலேக்கு எந்த மாதிரியாக உபயோகப்படுகின்றன என்று தெரியாது. அவைகளேத்தெரிந்து கொள்ள நம்மவர்கள் பிரயத்தனம் செய்கிறதில்லே.

பொன், வைரம், முதலானவைகளுக்குச் சுரங்கம் வெட்டுதல் கோடீஸ்வரர்களுக்குத்தான் தகுந்த வேலே. கோலார் பொன் கனிகளும் சிங்கரேனி நிலக்கரி கனிகளும்போன்ற மகத்தான வேலேகள் தனிமையாய் ஒரு மனிதருடைய திரவிய சகாயத்தால் நடத்தமுடியாத வேலேகள். அவைகள் பல தனவான்கள் ஒன்று சேர்ந்து நடப்பிக்கவேண்டிய காரியங்கள்.

நான் இவ்விடத்தில் அந்நிய தேசத்தார்களுடைய பணஸகாயத்தால் நடந்துவரும் பெரிய கனிகளைப்பற்றிச்சொல்ல எண்ணங்கொண்டவனல்ல. நம்மவர்கள் சுவல்ப முதலைக்கொண்டு அடியில் சொல்லப்படும் உலோக சத்துக்களின் கனிகளை ஜாக்கிரதையுடன் வேலை செய்யும் பக்ஷத்தில் அதற்குத்தகுந்த லாபம் அடைவார்கள். நம்முடைய தேசத்தில் மிகுதியாய் நில முடையவர்களும் ஜமீன்தார்களும் தங்களால் கூடிய வரையிலுங்கூட தங்களுடைய ஜமீன்களிலுள்ள சுவல்ப கனிகளில் சிரத்தையெடுத்துக்கொள்ளுவதில்லை. கல்கத்தா நகரில், ஜியோலாஜிகல் இன்ஸ்டிட்யூட் என்று சொல்லப்பட்ட பூகோள உறுப்பு லக்ஷண சங்கத்தில் அப்போதைக்கப்போது பிரசுரமாகி வரும் கனி சம்பந்தமான கிரந்தங்களைப்படித்த பூஸ்திதியுள்ளவர்களும் ஜமீன்தார்களும் நிராகரிக்கிறார்கள். அவைகளின் பயனைத்தெரிந்து அடைவதில்லை.

முன்காலத்தில் நம்முடைய தேசத்தில் அந்நிய தேசத்தார்களுடைய உதவியில்லாமல் சுரங்கங்களை வெட்டி உலோக சத்துக்களை வெளியெடுத்து வந்ததாகத்தெரிய வருகிறது. அநேக காலமாய் அப்படி நடந்துவந்த சுரங்கம் அறுத்தலை மறந்து நாம் நமக்கு அத்தியாவசியமாய் வேண்டிய பொருள்களுக்கு அந்நிய தேசத்தார்களை எதிர்ப்பார்க்கிறோம். நம்முடைய தேசத்தில் அகப்படும் பொருள்களாகிய உப்பு, செம்பு, இரும்பு, எஃகு, தகரம், ஈயம், கிரோஸின் எண்ணெய், நிலக்கரி, நவரத்தினங்கள், கட்டிடங்களுக்கு வேண்டிய சலவைக்கல் முதலியவைகளை நாம் அந்நிய தேசங்களிலிருந்து தருவித்துக்கொள்ளுகிறோம்.

நம்முடைய தேசத்தில் சில கிராமங்கள் அவைகள் சமீபத்தில் அகப்படும் உலோக சத்துக்களின் பெயர்களை அடைந்திருக்கின்றன. பங்கனபல்லிக் கடுத்த வஜ்ரகரூரில் வைரக்கல்லுகள் எடுக்கப்பட்டனவாம். காளஹஸ்தியிலாகா கனகதுர்க்கம், கனகம்போடு என்கிற கிராமங்களின் பக்கத்திலும், சுவர்னமுகி நதியிலும் பொன் அகப்பட்டமையால் அவைகள் அந்தப் பெயரைப்பெற்றன. இப்படிப்பட்ட உதாரணங்களினால் நம்முடையதேசத்தில் கனிவேலைகள் பூர்வத்தில்நடந்தேறிவந்தன என்று தெரிகிறது.

நம்முடைய ஸர்வகலா சாலையில் வருஷந்தோறும் ஒருடஜனுக்குக்குறையாமல் பூகோள உறுப்பு லக்ஷணம்தெரிந்தவர்கள் வித்தியா பட்டம் பெறுகிறார்கள். கனித்தொழிலில் அவர்களுடைய உதவி யின்றியமையாதது. ஏனென்றால் ஸர்க்கார் இலாகா இல்லாத சுரங்கமுடையவர்களுக்கும் சுரங்கக்குத்தகைக்காரர்களுக்கும் தாங்கள் வெளியெடுக்கும் உலோகசத்துக்கள் என்ன வேலைக்கு உபயோகப்படுமென்பது தெரியாது. இவர்கள் மேல்சொல்லப்பட்ட மாணவர்களின் உதவியை ஏன் அடையக் கூடாது?

உலோக சத்துக்கள் இரண்டு வகைப்படும். ஒருவகை பொன், வெள்ளி, செம்பு போன்ற கெட்டியானவையும், ஒளி செல்லக்கூடாதவையுமான உலோகங்கள். இவைகள்சாதாரணமாய் பூமியில் மிகவும் ஆழத்திலிருப்பதால் அவைகளை வெட்டி யெடுக்க விசேஷமான திரவியமும் ஜியாலொஜிஸ்ட்ஸ், அதாவது, பூகோள உறுப்புலக்ஷண சாஸ்திரிகளின் உதவியும் வேண்டியிருக்கின்றன. நவரத்தினங்கள், நிலக்கரி, கட்டடங்களுக்குரிய கல்லுகள், பாதைக்குவேண்டிய கூழாங்கல்லுகள், ரஸாயன வஸ்துக்களாகிய வெண்காரம், உப்பு, சிலாசத்து என்று சொல்லப்படும் 'ஜிப்ஸம்', கந்தகம் முதலியவைகளும், தேக ஆரோக்கியத்திற்கு பிரயோசனமான தாதுக்கள் நிறைந்த ஜலங்கள், வர்ணத்திற்கு உபயோகமான காவிக்கல்

லுகள் முதலியவைகள், நிலத்தைச் செழிப்பிக்கும்படியான பிரகாசித உப்பு என்று சொல்லப்படும் பாஸ்பேட் முதலியவைகள், இதர உலோகங்களுக்கு மெருகிடப் பிரயோசனமுள்ள குருந்தக்கல், செம்மணிமுதலியவைகள் சூட்டைத் தாங்கும்படியான கல்நார், அப்ரகம், மாக்கல் முதலியவைகள், இவைகள் இரண்டாவது வகுப்பை சேர்ந்தவை. இவைகள் சுவல்ப திரவிய சகாயத்தாலும் எளிதாயும் அகப்படக்கூடியவைகள். இங்கே சொன்னவைகளில் நம்முடைய ராஜதானியில் அகப்படக்கூடிய சில வற்றைப்பற்றி சொல்லுவோம்.

பூமியின் ஸாரத்தை விர்த்தி செய்யும் தன்மையுள்ள பாஸ்பேட் திருச்சினுப்பள்ளி ஜில்லா ஊட்டத்தூரிலும், புதுச்சேரியிலும் ஏராளமாய்க் கிடைக்கின்றது. வெடியுப்பு, கோதுமை, புகையிலை விளைவுக்கு மிகஉபயோகமானது. கடப்பை, கர்னூல் ஜில்லாக்களில் மிகுதியாய்க்கிடைக்கிறது. ஜிப்ஸம், அதாவது, சிலாசத்து கொடிப்பயிர்களுக்கும், அவுரிவிளைவுக்கும் உபயோகமானது. இது அசுத்த நிலைமையில் செங்கல்பட்டு ஜில்லாவில் களிமண்ணில் விசேஷமாயிருக்கிறது. கடப்பையில் மிகநேர்த்தியான பலகைக்கல்லுகள் அகப்படுகின்றன. நெல்லூர், சேலம் ஜில்லாக்களிலும் திருவாங்கூர் ராஜ்யத்திலும் அப்ரகம் எடுக்கப்பட்டுவருகின்றது. நெல்லூர் ஜில்லாவில் அகப்படும் அப்ரகம் வங்காளத்தில் அகப்படுவதைக்காட்டிலும் சிரேஷ்டமானது. அப்ரக வியாபாரம் மிகவும் லாபகரமானது. அது கண்ணாடிக்குப் பதிலாக அனேக விதமாக உபயோகப்படுகிறது. **அஸ்பெஸ்டாஸ்** என்று சொல்லப்படும் கல்நாரினால் ஓடுகளும் செங்கல்களும் பலகைகளும் செய்யப்படுகின்றன. சிம்மிட்டிக்கு உபயோகமான மைக்நிசட் என்கிற சுண்ணாம்புக்கல் சேலத்திற்குச் சமீபத்தில் கிடைக்கிறது. இதிலிருந்து பேதி உப்பும் செய்யப்படுகின்றது. சேலம் கடப்பை சித்தூர் நெல்லூர் ஜில்லாக்களில் மாக்கல் விசேஷமாய்க் கிடைக்கிறது. இது எழுதும் குச்சிகள், கிண்ணங்கள், பிரதிமைகள் முதலியவைகள் கஷ்டமில்லாமல் எளிதில் கடையக்கூடிய வஸ்து. இதன் பொடி சுவர்களுக்கும் முகத்திற்கும், ஜோடுகளுக்கும், துணிகளுக்கும். சோப்பு செய்வதற்கும் சாதாரணமாய் ஐரோப்பா கண்டத்தில் உபயோகப்பட்டுவருகிறது. ஒரு டன் அதாவது சுமார் $4\frac{1}{2}$ பாரம் பொடி அறுபது ரூபாய்க்கு விற்கப்படுகிறது. சாணைக்கல்லுகளுக்கும் உப்புகாகிதங்களுக்கும் உபயோகப்படும் குருந்தக்கல் சேலம், கோயம்புத்தூர் ஜில்லாக்களில் அகப்படுகிறது. தென்னிந்தியாவில் அகப்படும் இந்தக் கல் அமெரிக்காவில் பத்து பவுண்டு கல்லுகள் 4 ரூபாய்க்கு விற்கப்படுகின்றன. இந்தக்கல்லுகள் சாதாரணமாய் மற்றெந்தத்தேசத்திலும் அதிகமாய் அகப்படாததினால் இந்த வியாபாரம் நல்ல லாபத்தைக்கொடுக்கும் என்பதற்கு சந்தேகமில்லை. கர்னூல் ஜில்லாவில் நல்ல மலையிலும் எர்ர மலையிலும் எழுதும் ஸ்லேட் பலகைகள் விசேஷமாய் வெட்டியெடுக்கப்பட்டு ஐரோப்பாகண்டத்திற்கு ஏற்றுமதியாகின்றன. கட்டிடங்களுக்கு உபயோகமான பலவித கல்லுகள் இந்த ராஜதானியில் அநேக இடங்களில் கிடைக்கின்றன. பல்லாரி, கடப்பை, சித்தூர், சேலம், மதுரை, திருநெல்வேலி, இந்த ஜில்லாக்களில் கட்டிடங்களுக்கு மிக அழகைத்தருவதும் பளபளப்புள்ளதுமான கருங்கல் ஏராளமாய் அகப்படுகிறது. கோயம்புத்தூர் ஜில்லாவில் சிவமலையில் காரீயம் அகப்படுகின்றது. இது காகிதத்தில் எழுதும் பென்ஸில்கள் செய்ய உபயோகப்படுகிறது. வெண்கலம்

செய்வதற்கும் வர்ணக் கண்ணாடி செய்வதற்கும் எஃகைப்பதப்படுத்துவதற்கும் உபயோகமுள்ள 'மாங்கனீஸ்' என்கிற உலோகம் சண்டூரிலும் விஜயநகரத்திலும், மைஸூரிலும் அகப்படுகிறது. ஈயம் கடப்பை, கர்நூல், பல்லாரி இந்த ஜில்லாக்களில் அதிகமாயிருக்கிறது. மெற்குரி என்று சொல்லப்பட்ட பாதரசம் கன்னனூருக்கடுத்த லாடெரைட், அதாவது துருக்கற்களில் கிடைக்கிறது. நெல்லூர் ஜில்லாவில் பாமூருக்கடுத்த கரிமன்பெண்ட என்ற இடத்தில் செம்பு அகப்படுவதாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள். பீங்கான் கண்ணாடி செய்ய விசேஷமான களிமண் வகைகள் திருச்சினாப்பள்ளி ஜில்லாவில் பேரணைக்கும் காவேரிக்கும் மத்தியில் அகப்படுகின்றன. கூடலூர் ஜில்லாவில் பன்ருட்டிக்கடுத்த கடிலம் நதியின் தென்கரைக்கு ஸமீபத்தில் கூடலூர் கல்லுகளில் மிருதுவான களிமண் ஏராளமாயிருக்கிறது. இன்னும் லாபகரமானவையும் அபூர்வமானவையுமாகிய 'உல்ப்ரம்' திருச்சினாப்பள்ளி ஜில்லாவிலும் ரேடியம் என்கிற அற்புத உலோகத்தைத் தருவதாகிய மானஜைட் மணல் கன்னியாகுமரிக்கரையிலும், பேரைட் என்னும் உலோகம் காளஹஸ்தி இலாகாவிலும் அகப்படுகின்றன.

இப்படி தாதுஸமூர்த்தியினால் நம்முடைய தேசம் சிறந்திருக்க நம்மவர்கள் அதன் பயனை அடையாமல் உத்தியோகத்தை முதன்மையாகப் பாராட்டிக்கொண்டு வியாபாரத்தையும், கைத்தொழிலையும், விவசாயத்தையும் கைவிட்டார்கள். அதனால் லட்சுமி நம்மவர்களைத் துறந்து அந்நிய தேசத்தார்களிடம் சென்றாள். இனிமேலாவது வியாபாரம் முதலானவைகளை நம்மவர்கள் விருத்தி செய்வார்களென்று நம்புகிறேன்.

டி. எம். சுந்திரம் அய்யர்.

## A PLEA FOR SCHOOL GARDENS

BY

N. RAMABHADRA DIKSHIDAR.

## பள்ளிக்கூடத் தோட்டங்களின் அவசியம்.

இப்பொழுது பாடசாலைகளில் அனேக புதிய ஏற்பாடுகள் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டிருக்கின்றன. சிறுவர்கள் படிப்பில் அதிகக் கவனம் வைக்கவேண்டுமென்பதற்காக கிண்டர்கார்டன், பொருள்பாடம், சம்பாஷணை முதலிய நூதனப்பிரயத்தனங்கள் உண்டாயிருக்கின்றன. நாம் எவ்வளவுக்கெவ்வளவு சிறுவர்களுடைய மனதை உற்சாகப்படுத்துகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நாம் அவர்களுடைய தேக சௌக்கியத்தைக் கவனிக்க வேண்டும்.

தேக சௌக்கியத்தை விருத்தியாக்குவதற்கு ட்ரில், ஜிம்னாஸ்டிக்ஸ் போன்றவைகள் ஏற்பட்டிருக்கின்றன. தேசீய விளையாட்டுகளான பல்டி, தண்டா, முதலியவைகளும் பழக்கத்திற்குக் கொண்டுவரப் பட்டிருக்கின்றன. இவ்வளவு ஏற்பாடுகளும் சிறுவர்களை உற்சாகப் படுத்துகிறதில்லை. தற்காலத்தில் பள்ளிக்கூடங்களில் அமர்ந்திருக்கும் ட்ரில் உபாத்தியாயர்களைக்கண்டால் சிறுவர்களுக்குப் பிடிப்பதில்லை. அனேக பள்ளிக்கூடங்களில் ட்ரில் செய்ய அபிப்பிராய மில்லாத மாணாக்கர்கள் சிரங்கென்றும், சீக்கு என்றும் சாக்குச் சொல்லி தேகாப்பியாசம் செய்யாமல் நின்றுவிடுகிறார்கள். டாக்டர்களிடத்தில் இரண்டு மூன்று ரூபாய் கொடுத்து மெடிகல் ஸர்டிபிக் கேட்டுவாங்கி உபாத்தியாயர்களை ஏமாற்றித் தங்களையும் ஏமாற்றிக்கொள்ளுகிறார்கள்.

இந்தியா பாடசாலைகளில் தேகாப்பியாசம் சீர்குலைந்திருப்பதற்கு அனேக காரணங்களுண்டு. சிறுவர்களுடைய மனதைக்கவரும்

படியான தேகாப்பியாசங்களை உபாத்தியாயர்கள் அறிவதில்லை. அட்டென்ஷன், ரைட், லெப்ட், முதலிய கொடுமையான கட்டளைகளை சிறுவர்கள் வெகுகாலம் கேட்டுக்கொண்டிருக்கமாட்டார்கள். பலனற்ற வேலைகளில் சிறுவர்கள் பிரயாசைப்படுவதில்லை. தாங்களே வேலை செய்து சம்பாதிக்கப்பட்ட கறி, காய், பழங்களில் அவர்கள் மகிழ்ச்சி யடைவார்கள்.

ஆகையால், ஒவ்வொரு பாடசாலையிலும் ஒரு தோட்டம் இருக்கவேண்டியது அவசியம். அனேக இடங்களில் மாணக்கர்களால் பாதுகாக்கப்பட்ட தோட்டங்களிருக்கின்றன. ஆனால், சிறுவர்களைப் படிக்கவைக்கும் பள்ளிக்கூடங்களில் ஏன் தோட்டங்கள் அவசியமாக இருக்கவேண்டும்? நம்முடைய பாட்டன்மார்கள்தோட்டங்களில் மண்வெட்டி பிடித்துக் கொத்தித்தான் டிப்டி கலெக்டர் உத்தியோகம் செய்தார்களோ? என்று சில பேர் கேட்கலாம்.

குழந்தைகளுடைய தேகசௌக்கியத்திற்கும் நரம்பின் அபிவிருத்திக்கும் வெளிவேலைகள் மிகவும் அவசியம். ஆதிகாலத்தில், மண்வெட்டிபிடித்துக் கொத்தி உழுது வேலை செய்வதே மனிதர்களின் முக்கிய ஜீவனமாக இருந்தது. என்றாலும், நம்முடைய நிலம், நம்முடைய வீடு, நம்முடைய பணம் என்பது மனிதஜாதிக்கு ஸகஜம். ஆகையால் நிலத்தில் உள்ள அபிமானம் மனித ஜாதி ஆரம்பம் முதலிருக்கிறது. குழந்தைகளுக்கும் தங்கள் தோட்டங்களில் ஒருவித அபிமானம் ஜனிக்கிறது. வேலை செய்வதில் கௌரவமும், சொத்தில் அபிமானமும், கிழத்தனத்தை வகிக்கக்கூடிய திடசரீரமும், ஒருவரோடொருவர் நேசித்து நிற்கக்கூடிய நட்பும் பால்யத்தில் தோட்டங்களில் வேலைசெய்து அடையும் பயன்களே.

குழந்தைகள், சுயேச்சையாய் விளையாடக்கூடியஇடங்களைப்போல் தோட்டங்களைநினைப்பார்களென்பதற்குச் சந்தேகமில்லை. குழந்தைகளைத் தோட்டங்களில் வேலைசெய்யென்று மற்றவர்கள்கட்டாயப்படுத்தவேண்டியதில்லை. அவர்களுக்குத் தானாகவே ஒருஉற்சாகம் பிறக்கும். சிறு பிராயத்தில் தோட்டங்களில் வேலை செய்வதனால் முதிர்ந்த வயதில் நமக்கு மிகவும் நன்மையுண்டு. கறிகாய்கள், இலை, புஷ்பம் முதலியவைகள் கிடைப்பதற்கு மாத்திரம் தோட்டங்களில் நாம் வேலை செய்யக்கூடாது. அங்கே விதைகள் முளைக்காமல் இருக்கலாம்; பூச்சி புழுக்குள் செடிகொடிகளைக் கெடுத்துவிடலாம்; இவைகளின் காரணங்களை முதிர்ந்தவர்கள் குழந்தைகளுக்குச் சொல்லிக்கொடுக்க வேண்டும். கறிகாய்களை விற்பதால் லாபம் கிடைப்பதோடு பிற்காலத்தில் உதவக்கூடிய அனேக வித அனுபோகங்களையும் கற்றுக்கொள்ளுகிறோம்.

தோட்டம் வைத்துக்கொண்டே சிலர் ஜீவனம் செய்யலாம். அப்பொழுது பத்துப்பன்னிரண்டு வயதில் கற்றுக்கொண்ட வேலை மிகவும் உபயோகமுள்ளதாக இருக்கும்.

தோட்டங்களைப் பள்ளிக்கூடத்திற்கு சமீபத்தில் வைப்பதற்கு யார் திரவிய உதவிசெய்வார்கள்? யார் குழந்தைகளுடன் மாரடித்துக்கொண்டு வீண்போழுது போக்குவார்கள்? தோட்டமும் வேண்டாம், குளமும் வேண்டாம், குழந்தை வாசித்தால் போதும் என்று சிலர் எண்ணுகிறார்கள். அது மிகவும் தப்பு. யார் உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் கொடுக்கிறார்களோ, யார் பள்ளிக்கூடங்களை நிர்வகிக்கிறார்களோ, எந்தத் தகப்பனார் பிள்ளைக்குச் சம்பளம் கொடுத்துப்பள்ளிக் கூடத்தில் வைக்கிறாரோ, அவரே தோட்டங்களை வைத்து நிர்வகிக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

உதாரணமாக, கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல், ப்ரைமரி பாடசாலைக்குச் சமீபத்தில் குழந்தைகளால் பாதுகாக்கப்பட்ட ஒரு தோட்டமிருக்கிறது. மன்னார்குடி, பிண்ட்லே காலேஜுக்குச் சமீபத்தில் ஓர் அற்புதமான தோட்டமிருக்கிறது. இந்த இரண்டிடங்களிலும் வேலை சரிவர நடந்து வருகிறது. இதே விதமாக ஒவ்வொரு ப்ரைமரி, ஸெகண்டரி பாடசாலைகளிலும் தோட்டங்கள் ஏற்படுமென்று நம்புகிறோம்.

நா. ராமபத்திர தீக்ஷிதர்.

## SELECTIONS.
## விசேஷத் திரட்டு.

### THE DEPARTMENT OF INDUSTRIES.
### தொழில் முயற்சி டிபார்ட்மேண்ட்.

இந்த டிபார்ட்மெண்ட் நீர்ப்பாய்ச்சலுக்காக வேண்டிய ஆயில் எஞ்சின்களை நாட்டவும், பம்புகள், தண்ணீர் இறைக்கும் குழாய்கள் வைக்கவும், கிணறுகள் வெட்டவும், மற்றக் கைத்தொழில் வேலைகளுக்காக வேண்டிய யந்திரங்களைச் சாதாரணமாய் ஜோடிக்கவும், அவைகளை மேல்பார்வை யிடவும், குடிகளுக்கு உதவிசெய்யும் பொருட்டு கவரன்மெண்டாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த டிபார்ட்மெண்டார் ஜனங்களின் விண்ணப்பங்களின்பேரில் இடங்களைப் பார்வையிட்டு அவசியமான புத்திமதி சொல்லுவார்கள். இதோடு சேர்த்திருக்கும் கவரன்மெண்டு விளம்பரத்தில் குறிக்கப்பட்ட கட்டணங்கள் மாத்திரம்தான் இதற்காக சார்ஜ் செய்யப்படும்.

சர்க்கார் தரப்பில் தோல்களை க்ரோம் என்னும் ஒரு உப்பினுல் பதனிடும் தொழிலும் இந்த டிபார்ட்மெண்டார் வசத்தில் நடக்கிறது. சென்ற இரண்டு வருஷ காலமாய் வடஆற்காடு, செங்கல்பட்டு இந்த ஜில்லாக்களில் க்ரோம் என்னும் உப்பினுல் பதனிடப்பட்ட தோல்கள் சாதாரணமாய் உபயோகிக்கப்பட்டு வருகின்றன. அவைகள் கவலைகளுக்கும் தொண்டான்களுக்கும் மாப்பட்டையால் பதனிட்டப்பட்ட தோல்களைப்பார்க்கிலும் மிகவும் மேலானதாயிருப்பதாக அனுபவத்தில் தெரிகிறது. இந்தத் தோல் முரட்டு வேலைகளில் நெடுநாள் தாங்குகிறதைத்தவிர, எப்பொழுதும் மிருதுவாயிருக்கும். வடஆற்காடு ஜில்லாவில் அரக்கோணம், மணவந்தாங்கல், மாங்காடுச்சேரி, ராணிப்பேட்டை, வேலூர், கொத்தமங்கலம், காளஹஸ்தி இந்த இடங்களிலும், செங்கல்பட்டு ஜில்லாவில் திருவள்ளூர், பொன்னேரியிலும், சேலம் ஜில்லாவில் தர்மபுரியிலும், கோயம்புத்தூர் ஜில்லாவில் கோயம்புத்தூரிலும், சென்னபட்டணத்திலும் இந்தத் தோலை விற்பனை செய்ய ஏஜன்஬ிகளும், டிப்போக்களும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.

இந்த டிபார்ட்மெண்ட் வேலைக்குச் சம்பந்தமான இதர சமாசாரம் ஏதாவது தெரிய வேணுமானல் கஸ்பா பம்பிங் எக்ஸ்பெரிமெண்டு சூபர்வைசருக்காவது, மதராஸ் பூனமல்லி ரோட் 112-ம் நெ. தபால் பெட்டி, இண்டஸ்டிரீக்களின் டைரெக்டருக்காவது எழுதிக்கொள்ளலாம்.

கிணற்றுப்பாய்ச்சலை விருத்தி செய்யும்பொருட்டு, பூமிக்குள் குமிழ்ஜலம் கிடைக்கும் இடங்களில் குடிகளுக்கு தங்களுடைய அனுபோகத்திலுள்ள அபிப்பிராயத்தைக்கொண்டு உதவிசெய்ய பரிசோதனையாக ஆகர் போடுவதற்காகவும், மட்டி எண்ணெயினுல் வேலைசெய்யும் யந்திரத்தினுல் ஓடும்படியான பம்பு முதலானவைகள் போட்டுக்கொள்ள ஒத்தாசை செய்வதற்காகவும் கவரன்மெண்டார் கைத்தொழில் டிபார்ட்மென்டின் கீழ் ஒரு டிபார்ட்மெண்ட் ஏற்படுத்தியிருக்கிறுர்கள்.

பரிசோதனை நிமித்தம் ஆகர் போடுவதற்காக ஆகர் முதலிய ஆயுத முஸ்தீப்புடன் ஆகர்போடும் பார்ட்டிகளை நியமித்திருக்கிறுர்கள்.

ஸர்க்காரிடமிருந்து கடன்வாங்கி அந்தப்பணத்தைக் கொண்டோ அல்லது தன் சொந்தப்பணத்தைக்கொண்டோ ஒரு புதிய கிணறு இறக்கவேண்டுமென்ருவது அல்லது ஏற்கனவே இருக்கும் கிணற்றைச் செவ்வைப்படுத்த வேணுமென்ருவது அபிப்பிராயம் இருந்தால் குடித்தனக்காரர்கள் புதிதாகக் கிணறு இறக்குவதற்குக் குறித்திருக்கும் இடத்தில் பரிசோதிக்கும் பொருட்டு ஆகர்போடும்படி இதற்காக நியமித்திருக்கும் இலாகா உத்தியோகஸ்தர்களிடம் மனுசெய்து கேட்டுக்கொள்ளலாம். ஸர்க்காரிடத்திலிருந்து கடனுகவாங்குகிற பணத்தைக் கொண்டாவது தன் சொந்தப் பணத்தைக்கொண்டாவது அல்லது ப்ரைவேட் கம்பெனி வர்த்தகர்களிடத்தில் வாடகை வீதத்திலாவது ஆயில் எஞ்சின், பம்பு முதலானவைகள் போட்டுக்கொள்ளப்பிரியமுள்ள குடித்தனக்காரர்கள் அவ்விஷயத்திற்குரிய நடவடிக்கைகளைத் தெரிந்துகொள்ள மேற்கூறிய உத்தியோகஸ்தர்களிடத்தில் மனுசெய்து கொள்ளலாம். கவரன்மெண்டார் ஷ யந்திரங்கள் வாங்குவதற்காக விவசாய கடன் சட்டப்படி பத்து வருஷத்தில் வருஷவாரி வீதப்படி 6¼ ரூபாய் வட்டி

போட்டு திருப்பிக்கொடுக்கும்படி கடன் கொடுக்கிறார்கள்.

கம்பெனியாரும் ஷை யந்திரங்களை வாடகை வீதத்தில் கொடுக்கிறார்கள். மொத்தவிலையில் கால் பாகம் (100 க்கு 25) முதலில் கட்டவேண்டும். மீதியை வட்டிபோட்டு 6 மாதத்திற்கு ஒரு முறையாக மூன்று தவணையில் கொடுத்துவிடவேண்டும். அதாவது $1\frac{1}{2}$ வருஷத்தில் முழுத்தொகையையும் கட்டிவிடவேண்டும்.

சுமார் 20 ஏக்கர் புஞ்சை அல்லது 15 ஏக்கர் நஞ்சை இறைத்து சாகுபடி செய்யக்கூடுமான யந்திரம் விலை சாதாரணமாய் 1,750 ரூபாயாகிறது. ஆனால் ஷை விலை சாகுபடி செய்யக்கோரும் விஸ்தீர்ணத்தையும், கிணற்றின் ஆழத்தையும், ஷையின் பாங்கையும் பொருத்தது.

விவசாயிகள் கிணற்றுப்பாய்ச்சலை செம்மைப்படுத்துவதற்கும், விருத்தி செய்வதற்கும் இப்பொழுது அவர்களுக்கு நேரிட்டிருக்கும் அனுகூலமான சமயத்தை தங்களுக்கு இயன்றமட்டில் உபயோகப்படுத்திக்கொள்வதற்குக் கொஞ்சமேனும் தாமதம் செய்யக்கூடாது.

இந்த விஷயத்தைப்பற்றி திருவள்ளூரில் பம்பிங் டிபார்ட்மெண்டு ஓவர்ஸீயர் அவர்களுக்கும், மற்ற ஜில்லாக்களில் அடியில்கூறிய ஸூபர்வைஸர் அவர்களுக்கும் விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டியது :—

கோயம்புத்தூர், திருச்சினாப்பள்ளி—ஸூபர்வைஸர், கஸ்பா, கோயம்புத்தூர்.

சேலம், வடஆற்காடு—ஸூபர்வைஸர், கஸ்பா, ராயவேலூர்.

தென் ஆற்காடு, தஞ்சாவூர்—ஸூபர்வைஸர், விழுப்புரம்.

சாதாரணமாக போட்டுக்கொள்ளக்கூடுமான ஆயில் எஞ்சின்கள், பம்புகள், அவைகளுக்கு வேண்டிய இதர சாமான்களின் கிரயம் முதலான விவரங்கள் அடியில்கண்ட ஸ்டேட்மெண்டில் குறிக்கப்பட்டிருக்கின்றன.

பொன்னேரி, திருவள்ளூர் தாலூக்காக்களில் போரிங், அதாவது, ஜலம் இருக்கிறதா என்பதை அறியப் பூமியில் துளைபோடும் வேலை ஏற்கனவே நடந்துகொண்டு வருகிறது. இப்பொழுது இந்த ஜில்லாவின் இதர தாலூக்காக்களிலும், வடஆற்காடு, தென் ஆற்காடு, கோயம்புத்தூர், சேலம், தஞ்சாவூர், திருச்சினாப்பள்ளி ஜில்லாக்களிலும் வேலை ஆரம்பமாய்விட்டது.

| தண்ணீர் இறைக்கும் குழாயின் குறுக்களவு. | ஒரு நிமிஷத்தில் இறைக்கக்கூடுமான தண்ணீர். | சாகுபடி செய்யப்படும் நிலத்தின் விஸ்தீர்ணம். | ஜலம் எடுக்கப்படவேண்டிய உயரம். | யந்திரத்தின் வலுவு, குதிரை ஓட்டம். | யந்திரங்களின் விலை. | இஞ்சின் கொட்டகை எஸ்டிமேட். |
|---|---|---|---|---|---|---|
| | காலன். | ஏகரா. | | | ரூ. | ரூ. |
| 3 அங்குலம் .. | 184 | 10 முதல் 15 | 20 அடி.<br>27 ,,<br>30 ,, | 5<br>6<br>$7\frac{1}{2}$ | 1,800<br>2,000<br>2,100 | 150 முதல் 300 |
| 4 ஷை .. | 325 | 16முதல் 25 | 20 ,,<br>25 ,,<br>30 ,, | 6<br>$7\frac{1}{2}$<br>9 | 2,025<br>2,350<br>2,500 | 200 முதல் 300 |
| 5 ஷை .. | 480 | 25 முதல் 50 | 17 ,,<br>25 ,, | $7\frac{1}{2}$<br>12 | 2,500<br>3,125 | 250 முதல் 400 |

## INSTALLATION OF OIL ENGINES AND PUMPS.

## ஆயில் எஞ்சின்களும் தண்ணீர் இறைக்கும் குழாய்களும் வைத்தல்.

ஆயில் எஞ்சின்களும் தண்ணீர் இறைக்கும் குழாய்களும் வைக்கும் விஷயத்தில் கைத்தொழில் இலாகா டைரெக்டரின் ஆலோசனை கேட்க விருப்பமுள்ள நிலஸ்வான்களும், குடிகளும் அதற்காகக் கொடுக்கும் விண்ணப்பங்களுடன் ரூபாய் 10 கட்டணம் செலுத்தவேண்டும்.

இண்டஸ்ட்ரீஸ் டிபார்ட்மெண்டாரால் ஆயில் எஞ்சின்களும், தண்ணீர் இறைக்கும் குழாய்களும் ஜோடித்து மேல்பார்வை யிடுவதற்கு சென்னப்பட்டணத்தில் யந்திரம் வகைரா வின் விலை யின்பேரில் நூற்றுக்கு 2½ ரூபாய் வீதம் மொத்தத்தில் 50க்கு மேல்படாமல் சார்ஜ் செய்யப்படும். யந்திரம் வைத்த ஒரு மாதம் வரைக்கும் அது திருப்திகரமாய் ஓடுவதற்கும் மேல்பார்வை செய்வதற்கும் சம்பந்தமான எல்லாச் செலவுகளும் இந்தக் கட்டணத்தில் அடங்கியிருக்கின்றன.

யந்திரங்களை அப்போதைக்கப்போது சோதித்து சரிப்படுத்த விரும்பும் நிலஸ்வான்களும், குடிகளும் இந்த டிபார்ட்மெண்ட் ஆபீஸர்களுக்குத் தெரியப்படுத்திக் கொள்ளலாம். இந்த வேலைக்காக "அப்பர் ஸபார்டினேட்" என்னும் மாராமத்திலாகா உத்தியோகஸ்தரை ஏற்படுத்தினால் கட்டணம் ரூபாய் 10ம், "மெகானிகல் போர்மேன்" என்னும் யந்திர விசாரணைக்காரனுக்கு இந்த வேலை கொடுத்தால் ரூபாய் 5ம், சார்ஜ் செய்யப்படும். யந்திரத்தின் சொந்தக்காரர்கள், இது தவிர இன்னும் எல்லா ரிபேர் செலவையும் செலுத்த வேண்டியதாயிருக்கும்.

இந்த ராஜதானியில் செய்யும் வேலைகளுக்கு பிளான்களும், எஸ்டிமேட்டுகளும் தயாரிக்கும் விஷயத்தில் இண்டஸ்டிரீஸ் டைரெக்டரின் ஆலோசனை பெற்றுக்கொள்ள விருப்பமுள்ளவர்களுக்கு அவரே "கன்ஸல்டிங்கு எஞ்சினீராக" இருக்க அவருக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறது. இதற்கு ரூபாய் 50க்கு மேற்படாமல் கட்டணம் சார்ஜ் செய்யப்படும்.

கட்டணங்கள் சார்ஜ் செய்வதில் விண்ணப்பதார்கள் சொற்ப வரும்படியுள்ளவர்களாயிருந்து அவ்வளவு சார்ஜ் கொடுக்கமுடியாதவர்களாய் இருக்கக்கூடிய கேஸுகளில் இண்டஸ்டிரீஸ் டைரெக்டர் தனக்கு இஷ்டமிருந்தால் கட்டணங்கள் பூராவையுமாவது, அல்லது, அதில் ஒரு பாகத்தையாவது தள்ளிக்கொடுக்கலாம்.

## BORING FOR WELLS.

## கிணறுகளுக்காக துளைபோடுதல்.

இண்டஸ்ட்ரீஸ் டிபார்ட்மெண்டார் செய்யும் கிணற்று வேலைக்காக கட்டணங்கள் சார்ஜ் செய்வதற்கு விதிகள் :—

ஒரு தாலூக்காவில் கிணற்றுவேலைச் சிப்பந்திகளை ஏற்படுத்தும்போது அந்தச் சமாசாரம் டிஸ்டிரிக்ட் கெஜட்டில் பிரசுரம் செய்யப்படும். கிணற்றுவேலை சிப்பந்திகளின் விசாரணை ஆபீசருக்கு ரூபாய் 3 கட்டணத்துடன் மனுக்கள் கொடுக்கவேண்டும். அந்தக் கட்டணம் ஒரு பொழுதும் திருப்பிக் கொடுக்கப்படமாட்டாது.

மனுதார் ஆயுதங்களை தன் செலவில் வண்டியில் ஏற்றி கிணறு வெட்டவேண்டிய இடத்தில் காலதாமதமில்லாமல் கொண்டுபோய்ச் சேர்க்கவேணும். ஒருபொழுதும் 10 மைல்களுக்கு மேல்பட்ட தூரத்திலிருந்து சாமான்களைக் கொண்டு போகும்படி நேரிடாது. சாதாரணமாய் சாமான்களை வண்டியில் போட்டனுப்ப வேண்டிவரும். தூரம் இதைவிட மிகவும் குறைவாக இருக்கும்படியே ஏற்பாடு செய்யப்படும்.

கிணற்றுவேலை ஆயுதங்கள் ஒரு தகுந்த மேஸ்திரி வசத்திலிருக்கும். அவர் வேலைக்கு நாள் 1-க்கு ரூபாய் 1 சார்ஜ் செய்யப்படும். யார் உபயோகத்துக்காக கிணறு வெட்டப்படுகிறதோ அந்த மனுதார் தேவையான கூலிக்காரர்களை சப்ளை செய்யவேண்டும். கிணறு வெட்டித்தேறாத பக்ஷத்தில் கட்டணம் வாப்ஸ் செய்யப்படும். அல்லது மனுதார் நிலத்தின் ஹத்துக்குள் இரண்டு, அவசியமானால், மூன்று தடவை வரையில் கட்டணம் வாங்காமல் கிணறுவெட்டிப்பார்க்கப்படும். ஆனால் அப்படி செய்வதில்வேறு எவ்விதமாயாவது ஜலம் அகப்படும் என்ற நம்பிக்கைக்கு ஆதாரம் ஏதாவது இருக்கவேண்டும்.

கிணற்று வேலையின் முடிவை மனுதாரருக்குத் தெரிவிப்பார்கள். தவிர, இந்த மாதிரி அகப்பட்ட ஜலத்தினால் பூராப் பிரயோஜனத்தையும் அடைவதற்கு எடுத்துக்கொள்ளவேண்டிய முயற்சிகளைப் பற்றி அவருக்கு வேண்டிய ஆலோசனையும் சொல்லுவார்கள். கீழ்ஊற்றுத்தென்படும் பக்ஷத்தில் மனுதார் செலவில் தகுந்த காயமான குழாயை வைப்பதற்கு ஏற்பாடு செய்து கொடுப்பார்கள். இதற்காகும் செலவை மனுதாரனே கொடுக்கவேணும்.

இண்டஸ்டிரீஸ் டிபார்ட்மெண்டார் முன்னடியே இருக்கும் கிணறுகளில் ஜலம் எவ்வளவு இருக்கிறதென்பதைப் பரிசோதிக்க அவர்களால் கூடுமான வரையில் தண்ணீர் இறைக்கும் சாதனங்களை சப்ளை செய்வார்கள். கிணற்றிற்கு யந்திரத்தையும் தண்ணீர் குழாயை (பம்பு) யும் கொண்டுபோகப்பிடிக்கும் எல்லாச் செலவும் ஷை யந்திரங்களை வைத்துப்பரிசோதிக்கப் பிடிக்கும் விறகு, கூலி இந்தசெலவுகளையும் கிணற்றின் சொந்தக்காரர்கள் கட்டவேண்டும்.

## REVIEW OF THE PRESS.
## பத்திரிகை ஆராய்ச்சி.

### IMPROVEMENTS IN PADDY CULTIVATION.
### நெற்பயிரிடுவதில் சில திருத்தங்கள்.

இலங்கையில் பிரசுரமாகும் "கமத்தொழில் விளக்கம்" என்னும் பத்திரிகையின் மாசிமாதச் சஞ்சிகையில் "நெற்செய்கை திருத்தம்" என்று ஒரு விஷயம் காணப்படுகிறது. அதில் சிவகிரியில் நெற்பயிரிடும் விதத்தைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது.

முதலாவது, சிவகிரியில் சாதாரணக் கலப்பைக்குக் கொஞ்சம் மாறுபட்டிருக்கும் இருப்புக் கலப்பையினல் உழுகிருர்கள். சுதேசக்கொல்லர்களைக்கொண்டே இந்தக் கலப்பையைச் செய்யலாம். சாதாரணமாக் கலப்பையைப்போல இது நிலத்தைக் கீருது. உழுதுகொண்டுபோகும்போது இந்த இரும்புக் கலப்பை நிலத்தை பாளம் பாளமாய்ப்பிளந்து அந்தப்பாளங்களை மேல்கீழாய்த் திருப்பிவிடுகிறது. இப்படித் திருப்புவதினல் களை, புல், பூண்டு முதலியவைகள் நிலத்துக்குள் அகப்பட்டு மடிந்து உரமாகின்றன. உலர்ந்த நிலத்தில் மட்டுமே அல்லாமல் சேற்று நிலத்திலும் இந்தக் கலப்பையால் உழலாம். சாதாரணக் கலப்பையை மாடுகட்டி உழுவதுபோலவே இதையும் மாடுகட்டி உபயோகப்படுத்தலாம். இந்தக் கலப்பையால் மூன்று தரம் உழுதால் சாதாரணக் கலப்பையால் ஐந்து தரம் உழுவதால் ஏற்படும் நன்மை நிலத்துக்கு உண்டாகிறது. இந்தக் கலப்பையின் விலை ரூபா 6 தான். சிவகிரிப்பண்ணை மானேஜரிடம் இது விலைக்குக் கிடைக்கும்.

இரண்டாவது திருத்தம் எரு இடுவதைப்பற்றியது. ஆடு மாடுகளின் சாணம், மூத்திரம், படுக்கைக் குப்பை கூளங்கள் முக்கியமான எருக்களாகும். சிவகிரியில் உள்ளவர்கள் மிருகங்களால் கழிக்கப்பட்ட இரைகளுடன் மேல்சொன்ன எருக்களைக் கலந்து கிடங்குகளில்சேர்த்து மக்கும்படிச்செய்கிருர்கள். எரு சீக்கிரம் மக்கவேண்டுமானல் அடிக்கடி தண்ணீரையும் மிருக மூத்திரங்களையும் எருக் குப்பல்கள் மேல் தெளிக்கவேண்டும். எருவினுடைய சத்து காற்றுப்பட்டுக் குறைந்துபோகாதபடி குளத்து மண்ணுலாவது, வயல் மண்ணுலாவது, எருக் குப்பல்களை மூடிவைக்கவேண்டும். போதுமான மிருக எரு கிடைப்பது கஷ்டமாதலால் நிலத்து எருக்களையும் உபயோகப்படுத்தவேண்டும். சிவகிரியில் வேளாண்மை ஆனபின்பு **காவிராய்** அதாவது கொழுஞ்சி என்னும் விதையை நிலத்தில் விதைக்கிருர்கள். பங்குனி சித்திரை மாதத்தில் விதைத்தால் ஆவணி புரட்டாசி மாசத்தில் நிலத்தோடு சேர்த்து உழுவதற்கு பக்குவமாயிருக்கும். நெல் விதைப்பதற்குச் சில நாளைக்கு முன்பு நிலத்தை உழுவார்கள். இந்தப் பச்சைப் பூண்டு பின்விளையும் நெல்பயிருக்குத் தகுந்த உரமாகிறது. இந்தக் **கொழுஞ்சி** விதையை நிலத்தில் அதிகமாய்ப் பயிர்செய்து உழுதால் உவர் நிலங்கூட நல்ல நிலமாக ஆகிவிடும்.

இன்னெரு நல்ல எரு **சணல்**. இதைக்கொழுஞ்சி போல ஐந்தாறு மாசத்திற்கு முன் விதைக்கவேண்டியதில்லை. நெல் விதைப்பதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்பு விதைத்தால் போதுமானது. ஏக்கர் ஒன்றுக்கு 32 பறை வீதம் விளைந்த நிலம், சணற்பூண்டு எருவிடுவதால் 55 பறை விளைச்சலைக் கொடுக்கும்.

சிவகிரியில் உபயோகப்படுத்தப்படும் இன்னெரு வகையான எரு **குளத்து மண்**. குளம் தண்ணீர் வற்றி இருக்கும்போது அடியிற் கிடக்கும் வண்டல், பொருக்குமண் இவைகளைக்கிண்டி அள்ளி வெளியில் போட்டு, பின்பு வயல்களுக்கு உபயோகப்படுத்துகிருர்கள். சில சமயங்களில் இதை மிருக எருக்களுடன் கலந்தும் உபயோகப்படுத்துவார்கள். உவர் நிலங்களுக்கு இதைத் தனியாய் இட்டால் நல்ல நிலமாக மாறிவிடுகின்றன.

மூன்ருவது திருத்தம் விதை நெல் சேர்ப்பதைப் பற்றியாகும். நம் நாட்டில் நெல்லை அறுவடை செய்து கொண்டுவந்த பின்பு ஒரு பாகத்தை விதைக்கென்று எடுத்து வைத்துக் கொண்டு பாக்கியை சாப்பாட்டுக்கு உபயோகப்படுத்துகிருர்கள். ஆனல் சிவகிரியில் நெல்விளைந்திருக்கும்போது வேலையாட்கள் வயல் முழுவதும் உலாவிப்பார்த்து, நன்ருய் விளைந்திருக்கும் கதிர்களாகப்பார்த்துப் பிடுங்கிவந்து, தனியாக அடித்து எடுத்து, அந்தத்தானியங்களை விதைக்காக வைத்துக் கொள்ளுகிருர்கள். இப்படிச் செய்வதால் விதை

நெல் வேறு இனத்துக் கலப்பு இல்லாததும், சுத்தமானதும், நல்ல ஜீவசத்து உள்ளதுமாக இருக்கும். அதிகத் தண்ணீர்கட்டின நிலத்தில் விளைந்த நெல்லை விட, நீர்ப்பாய்ச்சல் குறைவான இடங்களில் விளைந்த நெல்லே விதைப்பதற்கு சிலாக்கியம். ஏனென்றால் அந்த நெல்லைவிதைத்தால் மழையில்லாத காலத்திலும் நெல் விளையக்கூடும்.

நாலாவது திருத்தம் நாற்று நடுவதைப்பற்றி. நம்மவர்கள் நாற்று நடும்போது நெருக்கமாயும் ஒரே குழியில் பல பயிர்களைச் சேர்த்தும் நடுகிறார்கள். சிவகிரியில் நாற்றுகளைத் தனித்தனியாக விலக விலக நடுவது வழக்கம். இப்படி விலக விலக நாற்று நடுவதால் அதிக லாபம் இருக்கிறதென்று கண்டு பிடித்திருக்கிறார்கள்.

ஐந்தாவது திருத்தம் நீர்பாய்ச்சும் முறையைப் பற்றி. நெல்லுக்கு எவ்வளவு அதிகமாக ஜலம் கட்டப் படுகிறதோ அவ்வளவுக்கு நன்மை என்று நம்மவர்கள் எண்ணுகிறார்கள். அளவுக்கு அதிகப்படாமல் அவசரமில்லாமல் நீர்பாய்ச்சுவதே நலமென்று சாஸ்திர ஆராய்ச்சிக்காரர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். அறுபது அங்குலம் நீர்ப்பாய்ச்சி விளைவிக்கப்படும் தானியம் புத்திசாலித்தனமாய் சரியானபடி ஜலம் பாய்ச்சினால் முப்பது அங்குலம் நீர் பாய்ச்சுவதினாலேயே விளைவித்துவிடலாமென்று பரிசோதனை முறையால் கண்டுபிடித்திருக்கிறார்கள். நெல்லுக்கு நீர்பாய்ச்சுகிறவர்கள் எப்போதும்தண்ணீர்நிற்கும் படி ஒரே முறையில் பாய்ச்சாமல், காய்க்காய நீர்பாய்ச்சுவதே நயத்தைக்கொடுக்கும்.

இந்த முறைகளை அனுசரித்துப் பயிரிடுவதால சிவகிரியில் விசேஷ லாபம் கிடைக்கிறதாம்.

**சிலங்கூர் வித்யாபாஸ்கரன்:**— "பிழைக்கும்வழி" இது சென்னையிற் பிரசுரமாகும் அற்புத மாதாந்திரப்பத்திரிகை. எழுத்துக்காகிதம் முதலியனவற்றில் அதிக தெளிவாயிருப்பதனால் படிப்போர்க்கு விருப்பத்தைக்கொடுக்கும். அதன் பெயருக்குத் தக்கவாறே உள்ளுரைகளும் இந்தியர்கள் பிழைப்பதற்கான வழி முறைகளை எடுத்துரைக்கின்றது. இதன் பத்திராசிரியர் ஸ்ரீமத் வைத்தியநாதன். B, A. அவர்கள் பல துறைகளிலும் கைபோனவர் என்பது அவருடைய வியாசங்களினால் அறியப்படும். இப்பத்திரிகைக்கு விஷயதானஞ் செய்வோர் உயர்தரக்கல்வி கற்றவர்களாதலின் தமிழ் மக்கள் இதைப்பெற்றுப் படிப்பின் உண்மையில் அனுகூலமடைவார்கள். இதன் வருடசந்தா ரூபா 4—0—0.

## COUNTRY LIFE AND TOWN LIFE.

## நாட்டு வாசமும் நகர வாசமும்.

——: o :——

"வித்தியா விஹாரிணி" யின் மாசி மாதச்சஞ்சிகையில் ஸ்ரீமதி எஸ். பொன்னம்மாளால் இந்த விஷயத்தைப்பற்றி ஒரு வியாசம் எழுதப்பட்டிருக்கிறது. தேகசௌக்கியத்துக்கு முக்கியமாக வேண்டிய குடிதண்ணீர் வசதியும், சுத்தமான காற்றும், பெரிய பட்டணங்களில் இல்லாதபடியாலும், திருச்சினாப்பள்ளி போன்ற சில இடங்களில் ஜல சௌக்கியம் இருப்பதாக வைத்துக்கொண்டாலும், குடியிருக்கும் வீடுகள் தொம்பர் குடிசையைவிட மோசமாயிருப்பதாலும், வெளியே கிளம்பினால் நாசித் துவாரம் முதலியவைகளில் புழுதி அடைவதாலும், தேகசுகம் குறைந்து அதனால் மனச்சுகமும் குறைந்து போகிறது. தவிர, போக்கிரிகள் மத்தியில் அகப்பட்டு பல விதமான கஷ்டங்கள் உண்டாகின்றன. இவைகளை உத்தேசிக்கும்போது நகரவாசத்தைவிட நாட்டு வாசமே நல்லதென்று சிலபேர்களுக்குத் தோன்றுகிறது.

கிராமத்தார்கள் ஒரு நாளைப்போலவே தினம் உண்பதும் உறங்குவதுமாக இருந்து சரியான பொழுதுபோக்கு இல்லாமல் சோம்பேறிகளாகக் காலங்கழிப்பதாலும், பயிர், மழை, வெயில், விலைவாசி இந்தப் பேச்சுகளைத் தவிர வேறு பேச்சு நாட்டு வாசிகளுக்குத்தெரியாததாலும் சீட்டாட்டமும் வேறு விதமான வ்ருதா காலட்சேபங்களும் செய்து சர்வமானியங்களைப் பறக்கவிடுவதாலும், நகரவாசமே நாட்டு வாசத்தைவிடச் சிறந்தது என்று வேறு சிலருக்குத் தோன்றுகிறது.

நாட்டில் வசிப்பதால் ஏகாந்தமான இடங்களையும், காடு மலைகளையும், அருவிகளையும், பசும் புல் தரைகளையும் மனதில் நினைத்து சந்தோஷமடையலாம். பட்டணங்களில் பலவித வியாபாரங்களும் ஜனக்கூட்டமும் இருப்பதால் பட்டணத்தில் வசிப்பதால் ஒருவன் சோம்பேறியாயிராமல் தனது புத்திக்கும் சக்திக்கும் தகுந்தபடி அலுவல் தேடிக்கொள்ள இடமுண்டாகிறது. முழு மூடனானாலும் புத்திமான்கள் சேர்க்கையால் கல்வியும் நாகரீகமும் அடையலாம். பலதேசத்து ஜனங்கள் கலப்

பதால் நடை யுடை பாவனைகளில் தேர்ச்சி பெற இடமுண்டு. காலத்தை இனிதாகப்போக்குவதற்கு விநோதசாலைகளும் மண்டபங்களும், நாடகசாலைகளும் இருப்பதால் கிராம வாசிகளைப்போல் திண்ணையைக் காத்துக்கொண்டிராமல் விநோதமாகப் பொழுதுபோக்க இடமுண்டாகிறது.

மொத்தத்தில் நாட்டு வாசமும் நகர வாசமும் கலந்தே இருக்கவேண்டுமென்றும், இளமைப்பருவத்தில்நகரத்திலும், முதுமைப்பருவத்தில் நாட்டிலும் வசித்தல் நலமென்றும் ஸ்ரீமதி பொன்னம்மாள் அபிப்பிராயப்படுவதாகத்தெரிகிறது.

## ANTS.
## எறும்புகள்.

ஜனவரிமாஸத்து'யாதர் மனோரஞ்சனி' யில்எறும்புகளைப்பற்றி ஆர். கே. ஸ்வாமி என்பவர் ஒரு வியாஸம் எழுதியிருக்கிறார். நாம் கறவை மாடுகளைப் பரிபாலிப்பதுபோல சில எறும்புகள் பால் கொடுக்கும் சில பிராணிகளைப் பரிபாலிக்கின்றனவாம். மாதுளை போன்ற சில மரங்களின் இலைகளிலும் கிளைகளிலும் வெகு அடர்த்தியாக சில பூச்சிகள் ஒட்டிக்கொண்டிருப்பதை அனேகர் பார்த்திருக்கலாம். பூதக்கண்ணாடியால் பார்த்தால் இந்தப் பூச்சிகளின் பின் புறத்தில் நுனியில் மூலைக்காம்பு போன்ற இரண்டு அவயவங்கள் நீண்டு இருக்கக் காணலாம். இந்தக் காம்புகளிலிருந்து பால் வருகின்றது. எறும்புகள் இந்தப்பூச்சிகளைத் தங்கள் இருப்பிடங்களில் கொண்டு போய் வைத்துக்கொண்டு அவைகளின் பாலை வெகு ஆவலோடு குடிக்கும் சில செடிகளில் எறும்புகள் நிறைந்திருப்பதற்குக் காரணம் இந்தப் பூச்சிகள் இருப்பதுதானும். சில எறும்புகளுக்கு மதுரமான பால் அவைகளின் சரீரத்திலேயே இருக்கிறதாம். இப்படிப்பட்ட எறும்புகள் அமெரிக்காவிலுள்ள மெக்ஸிகோ நாட்டில் உண்டு. பிள்ளைகளும் பெண்களும் மெக்ஸிகோவில் இந்த எறும்புகளின் தலையையும் மற்றப் பாகங்களையும் கிள்ளி எறிந்துவிட்டு தேன் நிறைந்த பாகங்களை உண்பார்களாம். சிலர் இந்த எரும்புகளை யந்திரத்தில் வைத்து நசுக்கி சிறந்த சாராயம் இறக்குகிறார்களாம். தேனீக்கள் மட்டுமே அல்லாமல் சில ஜாதி எறும்புகளும் தேனைச்சேர்த்தும், கூட்டியும், வருகின்றன என்று இதனால் தெரிகிறது.

## THE CULTIVATION OF CUMBU.
## கம்பு சாகுபடி.

"நல்லாசிரியன்" என்னும் மாதாந்தப் பத்திரிகையின் ஜனவரி மாஸத்திய சஞ்சிகையில் கம்பைப் பற்றிய வியாஸம் ஒன்றிருக்கிறது. கம்பு தேகத்துக்குக் குளிர்ச்சி தரக்கூடிய ஒரு அழுத்தமான புஞ்சைத்தானியம். மாடுகளுக்குப் பால் விருத்தி செய்யக்கூடியது. அது மானவாரிப் புன்செயில் விளைந்தால் காட்டுக் கம்பென்றும், தோட்டப்பாசனத்தில் விளைந்தால் அரிசிக் கம்பென்றும் பெயர் பெறும். மணல் கலந்த நிலமும், கரிசல் பூமியும் பயிரிடத்தகுந்த பூமிகள். சென்னை ராஜதானியில் பல்லாரி, கிருஷ்ணை, மதுரை, திருநெல்வேலி, கோயம்புத்தூர் முதலிய ஜில்லாக்களிலெல்லாம் கரிசல் பூமிகள் இருக்கின்றன.

ஆட்டுப்பட்டி, மாட்டுப்பட்டி ஆகிய இவைகளை பூமியில் முதல் முதல் கிடத்தவேண்டும். ஏகரா ஒன்றுக்கு 10 வண்டி குப்பைபோட வேண்டும். கோடைகாலத்து மழையில் நிலத்தைப் பலதரம் உழுது பண்படுத்தவேண்டும். சாதாரணமாய் ஆனி, ஆடி மாதங்களில்தான் கம்பு விதைப்பது வழக்கம். ஒரு ஏகராவுக்கு எட்டுப்படி முதல் பத்துப்படி வரையில் விதை விதைத்து மறுபடியும் உழவேண்டும். விதைத்த இருபது நாளைக்கெல்லாம் மறுபடியும் உழுவது வழக்கமுண்டு. கம்புப்பயிருக்கு ஜலம் ஜாஸ்தி வேண்டியதில்லை. மழை அதிகமானல் பயிர் தாங்காது. கதிர்பிடிக்கும் தருணத்தில் மழை பெய்தால் மணி பிடிக்காது. கம்பை நான்கு மாஸத்தில் அறுவடை செய்யலாம். கம்பந்தட்டையைக் கடிப்பது கடினமாதலால் அதை மாடுகளுக்கு அவ்வளவாகத்தீனியாகப்போடுவதில்லை. ஆகையினால் கதிர்களை மாத்திரம் அறுத்துக் கொண்டு தாள்களை அப்படியே விட்டுவிடுவது வழக்கம். கம்பந்தட்டை கூரை வேய்வதற்குப் பிரயோஜனமாகிறது. சாதாரணமாய் ஏகரா ஒன்றுக்கு செலவுபோக 20 ரூபாய் கிடைப்பதாகத் தெரியவருகிறது. நமது ராஜதானியில் 30 லக்ஷம் ஏகரா பூமியில் கம்புப்பயிர் செய்யப்படுவதாக கணக்கிட்டிருக்கிறார்கள்.

## OUR LITTLE ENEMIES.

## நமது சிறிய சத்துருக்கள்.

டாக்டர் ஒய். சுப்பிரமணிய ஐயர் என்பவர் "ரங்கூன் ரஞ்சித போதினி"யின் ஜனவரி மாதச் சஞ்சிகையில் இந்த விஷயமாக எழுதியிருக்கிருர். இவர் சிறிய சத்துருக்கள் என்று சொல்வது சிறு கிருமிகளேயும் புழுக்களேயும். இந்தக்கிருமிகள் இருக்குமிடத்தில் சுத்தமான ஊசிநுனியை வைத்தால் அவைகள் அதில் ஒட்டிக்கொள்ளும். இந்தக் கிருமிகளேத் தனித்தனியாக நாம் பார்க்க முடியாவிட்டாலும் அவைகள் திரண்டு இருக்கும்போது பார்க்கலாம். இவைகள் உருண்டை வடிவமாகவும் திண்மையாகவும் இருந்தபோதிலும் ஒவ்வொன்றிற்கும் உயிருண்டு. இந்தக் கிருமிகள் வளர்ந்து சிறிது பருமனுனவுடன் ஒவ்வொரு கிருமியும் இரண்டாக விண்டு போகும். இவைகள் பெருகும் விதத்தைப் பார்த்தால் நமக்கே ஆச்சரியமாயிருக்கும். ஒரு சிறு கிருமியை எடுத்து அதை ஒரிடத்தில் வைத்து அதற்கு வேண்டிய போஷணை செய்தால் பன்னிரண்டு மணி நேரத்திற்குள் அது ஒரு கோடியே எண்பது லட்சம் கிருமிகளாகப் பெருகிவிடும். ஆனல் அப்படிப் பெருகுவதற்குத் தகுந்த சந்தர்ப்பங்களும் அனுகூலங்களும் இருக்கவேண்டும். கிருமிகள் பாதகக் கிருமிகளென்றும், சாதகக் கிருமிகளென்றும் இரண்டு வகைப்படும். பாதகக் கிருமிகள் நம்முடைய சரீரத்துக்குள் புகுந்து ஏராளமான விஷத்தைப் பிறப்பித்துச் சரீரம் முழுவதும் பாவச்செய்கின்றன. அதாவது, நம்மை ரோகிகளாக்கிவிடுகின்றன. மனுஷதேகத்துக்கு நேரிடக்கூடிய வியாதிகளில் அநேகம் இவ்வித விஷக்கிருமிகளாலேயே உண்டாகின்றன. இந்த விஷக்கிருமிகளால் உற்பத்தியாகும் வியாதிகளில் வாந்திபேதி, சன்னிபாத சுரம், க்ஷய ரோகம், கொள்ளைநோய், பிளவை, கருங்குஷ்டம், அம்மைகள் முதலியன சிலவாம். நாம் குடிக்கும் ஜலத்தில் விஷபேதிக் கிருமிகள் இருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். இந்த ஜலத்தைக் குடிப்பதால் கிருமிகள் சரீரத்தில் புகுந்து வாந்தி பேதியை உண்டாக்குகின்றன. இந்த நோய்க்கிருமிகள் நோயாளியின் மலம், மூத்திரம, வாந்தி முதலியவைகளின் மூலமாய் வெளியேறுகின்றன. நோயாளியின் படுக்கை முதலியவைகளைச் சுத்தப்படுத்தும்போது இந்தக் கிருமிகள் தண்ணீரில் சேருகின்றன. நோயாளி வீட்டிலிருப்பவர்கள் குளத்தில் ஸ்நான பானம் செய்வதால் இக்கிருமிகள் குளத்திலும் கிணற்றிலும் சேருகின்றன. இப்படியே நெடுக இந்தக்கிருமிகள் பரவி தொத்து வியாதியை உண்டாக்குகின்றன. மற்ற வியாதிகளுக்கும் இப்படியே பார்த்துக்கொள்ளவும். மற்றொரு வகையான சிறிய சத்துருக்கள் இக்கிருமிகளைவிடப் பெரியவை. அவைகள் கொசுக்களும் ஈக்களுமாம். கொசுவுக்கு மனுஷ ரத்தம் மிக ருசியான ஆகாரம். கொசு ரத்தத்தைக் குடிக்கும்போது அது உட்கொண்ட விஷக்கிருமி அவர் சரீரத்தில் பாய்ந்து ஜுரம் முதலிய நோய்களை உண்டாக்குகிறது. ஈக்கள் எலியின் ரத்தத்தை உண்டு ஜீவிக்கின்றன. இவைகள் எலியில் இருக்கும் பிளேக்கிருமிகளை உட்கொள்வதால் இந்த ஈக்கள் கடிக்கும் சரீரத்திற்கு பிளேக் வியாதி உண்டாகிறது. சாதகக் கிருமிகளும் நம்முடைய சரீரத்தில் இருக்கின்றன. இவைகள் விஷக்கிருமிகள் சரீரத்தில்புகுந்தால் அவைகளுடன் சண்டைபோட்டு அவைகளைக்கொன்று நம்முடைய சரீரத்தைப் பாதுகாக்கின்றன. நம்முடைய சரீரம் சுகமாயும் பலமுள்ளதாயுமிருந்தால் இந்தச் சாதகக் கிருமிகளும் பலமுடையனவாயிருக்கும். பாதகக் கிருமிகள் நம்முடைய சரீரத்தில் புகுந்து வியாதியை உண்டாக்காமல் முன் ஜாக்கிரதையாய் இருக்கச் சில வழிகள் இருக்கின்றன. நாம் சாப்பிடும் ஆகாரத்திலும் சுவாசிக்கும் காற்றிலும் இந்த விஷக்கிருமிகள் இல்லாதபடி பார்த்துக்கொள்ளவேண்டும். தண்ணீரையும் பாலையும் கொதிக்கவைத்துச் சாப்பிடவேண்டும். சுத்த காற்றை சுவாசித்தால் க்ஷய ரோகம் வராது. இரவில் தூங்கும்போது கொசுவலை போட்டுக்கொண்டு நித்திரை செய்யவேண்டும். வீடுகளில் எலிகள் நடமாடாமலும், சூரிய வெளிச்சம் படும்படிச் செய்வதாலும், வீட்டைச் சுத்தமாக வைத்திருப்பதாலும் பிளேக் வராமல் தடுக்கலாம். அகஸ்மாத்தாய்ப் பாதகக் கிருமிகள் உள்சென்றாலும் அவைகளை சாதகக் கிருமிகள் நாசமாக்கி நம்முடைய சரீரத்தைப் பாதுகாக்கின்றன.

## THE RUBY.
## மாணிக்கக் கல் அல்லது கெம்பு.

இது விஷயமாக "விவேக போதினி" யின் பிப்ரவரி மாதச்சஞ்சிகையில் மிஸ்டர் பி. வி. ஸ்வாமி ராவ், எம். ஏ., ஒரு வியாஸம் எழுதியிருக்கிறார். கெம்பு என்று வழங்கப்படும் மாணிக்கக்கல் **குருவிந்த** ஜாதியில் சிறந்த ரத்நம். அழகிலும், மனோரம்மியத்தை உண்டாக்குவதிலும் மாணிக்கக்கற்கள் சிறந்தன. குணத்தில் வைரம் இதற்கு ஒவ்வாது. நிறைவின்மையாலும், கண்ணாடியைப்போல் கெம்பு வெடிப்பதாலும் இது வைரத்தை ஒவ்வாது. குற்றமுள்ள மாணிக்கம் கூட செதுக்கப்பட்டால் தன் ஒளியின் பிரகாசத்தால் மதிப்படையும். கெம்பை அஜாக்கிரதையாக உபயோகப்படுத்தினும் அதன் ஒளிமாறாது. கெம்பு என்று சொல்லப்படும் மாணிக்கம், மெய் மாணிக்கம், பொய் மாணிக்கம் என்று இரண்டு வகைப்படும். தாப்புக்கல் என்னும் பொய் மாணிக்கத்திற்குப் பிரகாச சம்பந்தமான நீரோட்டம் கிடையாதாதலால் அது சிறந்ததாக மதிக்கப்படுவதில்லை. மெய் மாணிக்கம் வலுவில் சிறந்தது. பிரகாசத்தில் உயர்ந்தது. பால் ரோஜாவர்ணத்திலிருந்து ரத்தவர்ணம் வரையில் கெம்புக்கல்லில் பிரகாசம்வீசும். இந்தக்குணந்தான் நீரோட்டமென்று சொல்லப்படுகிறது. சிறந்த மாணிக்கத்தின் வர்ணம் கருஞ்சிவப்பில் பால் நீலம் பாய்ந்தாப்போல் பிரகாசிக்கும். மாதுளம் பழத்தின் விதைபோல் ஒளிவீசும். ஒரு பக்கம்விட்டு மற்றோர் பக்கம் பார்த்தால் மாணிக்கக்கற்கள் நிறம் வேறுகத்தோன்றும். இதற்கே **த்விவர்ண ஸ்வபாவம்** என்று சொல்லப்படும். பொய் மாணிக்கத்திற்கு இந்த குணம் இல்லை. பொய் மாணிக்கத்திற்கும் மெய் மாணிக்கத்திற்கும் வித்தியாசம் கண்டுபிடிப்பதற்கு இது ஒரு வழியாகும். ஒரே (முகத்தலளவு) அளவான தாப்புக் கல்லையும், மெய் மாணிக்கத்தையும் நிறைபோட்டால் மெய் மாணிக்கம் கனம் அதிகமாகவிருக்கும். பொய் மாணிக்கம் தன் அளவான ஜலத்தைக்காட்டிலும் நான்கு மடங்கு கனமானது. பொய் மாணிக்கமும், தாப்புக்கல்லுகளும் கெம்பைக்காட்டிலும் கனம் மிகக்குறைவு. பொய் மாணிக்கத்திற்கும் மெய் மாணிக்கத்திற்கும் வித்தியாசம் கண்டுபிடிக்க இதுவும் ஒரு வழியாகும். இன்னொரு விதத்தாலும் வித்தியாசம் அறியலாம். மாணிக்கக்கல்லின் கூர்மையான முனையால் பொய் மாணிக்கம், தாப்புக்கல் இவைகளின் மேல் கீறினல் கோடுகள் விழும். அவைகளால் மாணிக்கத்தின் மேல் கீறினல் கோடு விழாது. இந்த மூன்று குணங்களைக்கொண்டு கெம்புக்கல்லை மற்றப்பொய் மாணிக்கக் கல்லுகளிலிருந்துபிரித்தெடுக்கலாம். 150,000 ரூபாய் முதல் 300,000 ரூபாய் வரையில் விலை மதிக்கப்படும் கெம்புக்கல்லுகள் இருக்கின்றனவாம். இப்படிப்பட்ட உயர்ந்த விலை குற்றமற்ற கெம்புகளுக்குத்தான் உண்டு. ஒளி மழுங்கியிருத்தல், வெள்ளையாகி முகில் பாய்ந்திருக்கும் நசனைகள், வெடிப்புக் கோடுகள், முதலான குற்றங்கள் கெம்புக்கல்லுகளில் காணக்கூடியன.

---

## THE MADRAS GLASS WORKS.
## சென்னைக் கண்ணாடி சாலை.

சென்னையில் சில நாளாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் 'மெட்ராஸ் கிளாஸ் ஒர்க்ஸ்' என்ற கண்ணாடிகள் செய்யும் தொழிற்சாலைக் கம்பெனியார் தங்கள் உலையில் செலவாகும் விறகைக் கவான்மெண்டு காடுகளிலிருந்து இனுமாகக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். இப்போது அவர்களுக்குச் சாதகமாக உத்தரவு செய்யப்பட்டிருக்கிறது. இந்த உலையில் செலவாகும் பாதியளவு, 7200 டன்னுக்கு அதிகப்படாமல், இரண்டு வருஷத்துக்கு விறகு இனுமாகக் கொடுப்பதாக உத்தரவு செய்யப்பட்டிருக்கிறது. கடப்பை ஜில்லாவிலுள்ள கோடூருக்கு சமீபத்தில் சேஷாசலம் ரிஸர்வ்டு பாரஸ்டிலிருந்து இது கொடுக்கப்படுமென்றும், விறகை வெட்டுவதும் கொண்டுபோவதும் கம்பெனியின் செலவாயிருக்க வேண்டுமென்றும், பாரஸ்டு உத்தியோகஸ்தர்கள் அவசியமானபடி மேற்பார்வை பார்த்து வரவேண்டுமென்றும், ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

## AGRICULTURAL NOTES.
## விவஸாயக் குறிப்புகள்.

THE YIELD OF COWS.

**பசுக்களின் கறவை.**—பசுக்கள் நன்ருய்க் கறக்க வேண்மொனுல், நல்ல தீனி போடவேண்டுமென்று சொல்லுகிருர்கள். உலகத்தில் பல இடங்களில் பரிசோதனை செய்துபார்த்ததில், மாடுகளின் கறவை தீனியைப் பொறுத்தது அல்ல என்று தெளிவாக ஏற்பட்டிருக்கிறது. ஆகார வேற்றுமையால் பால் அளவு சொல்பமாகத்தான் ஏறலாம் குறையலாம். ஜாஸ்தியாகப் பால் கறப்பது மாட்டின் வர்க்கத்தைப் பொறுத்ததாம். ஆகையால் கறவைமாடு வாங்குகிற வர்கள் நல்ல பால்வர்க்க மாடாய்ப் பார்த்து வாங்கி, தக்கபடி போஷிக்கவேண்டும்.

THE AIM OF THE AGRICULTURAL COLLEGE.

**விவசாய காலேஜின் நோக்கங்கள்.**—கோயம்புத்தூர் விவசாய காலேஜின் நோக்கமானது நிலச்சுவான்களுக்கும், கிருஷிகர்களுக்கும் தங்கள் நிலத்தை தற்காலத்தில் பயிர்செய்வதைவிட அதிக லாபகரமாய்ப் பயிர்செய்ய சக்தியுண்டாக்கக்கூடிய அனுபோகமுள்ளதும் சாஸ்திரோக்தமுமான விவசாயத்தைக் கற்பிப்பதுதான். இந்தக்கல்விச்சாலையோடு சேர்ந்திருக்கும் பண்ணையில் அப்பியாச பூர்வகமாக ஷிவித்தையைக் கற்பிக்கிருர்கள். இந்தப் பண்ணையில் நஞ்சை நிலமும், புஞ்சை நிலமும், தோட்டக்கால் நிலமும் உண்டு. சென்னை ராஜதானியில் சாகுபடியாகிற ஏறக்குறைய எல்லாப்பயிர்களும் இந்தப் பண்ணையில் பயிர் செய்யப்படுகின்றன. இந்தப் பண்ணையில் நடக்கும் பயிர்வேலையை மாணக்கர்களும் கூடயிருந்து செய்து, உழுதல், விதைத்தல், முதலாகிய பண்ணைவேலைகளை எப்படிச் செய்வதென்று தாங்களே சுதாவாகச்செய்து கற்றுக் கொள்ளுகிருர்கள். இந்த விதமாகத்தானே இவர்கள் பின்னுல் தங்களுடைய குடிகளுக்கோ, அல்லது கூலிக்காரர்களுக்கோ வேலையைக் கற்பிக்க கற்றுக் கொள்ளலாம்.

இந்தக்கல்விச் சாலையில் விவசாய சம்பந்தமான எல்லா முக்கிய சாஸ்திரங்களும் கற்பிக்கப் படுகின்றன. இந்தக் கற்பனையானது மாணக்கர்களுக்கு ஏன் சில பயிர்கள் நன்ருய் வளர்கின்றன, மற்றவைகள் நன்ருய் வளர்கிறதில்லையென்று காண்பிப்பதற்காகத்தான். விவசாயத்தில் கொஞ்சம் சாஸ்திர ஞானமுள்ள நிலச்சுவான்கள் வெகு சுலபமாகவே தங்களுடைய குடிகளுக்கு எப்படி அதிக நல்ல பயிர்களை சாகுபடி செய்யலாமென்று காண்பிக்கலாம். ஆகையால் அதிக நிலமுள்ளவர்கள் தங்கள் குமாரர்களில் ஒருவரை இந்தக் கோயம்புத்தூர் விவசாயக்கல்விச்சாலைக்கு அனுப்பப் ப்ரயத்தனஞ் செய்யவேண்டும்.

படிப்பைப்பற்றிய எல்லாவிஷயங்களையும், இந்தக் கல்விச்சாலையின் சட்டங்களின் காப்பி ஒன்றையும் விலையில்லாமலே ப்ரின்ஸ்பாலுக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

INDIGO.

**அவுரி.**—இது பசுந்தாளுக்காகப் பயிரிடுவதற்கு வெகு உபயோகமுள்ள பயிர். இது நீடித்த கோடையிலும் உண்டாகும். களிமண் நிலங்களில் ஈரந்தங்கியிருக்கும்போது உண்டாகும். ஆனுல் கொஞ்சமாவது களருள்ள நிலங்களில் உண்டாகாது. காவேரி நதி தீரத்தில் இது இப்போது அதிகமாய்ப் பயிராகிறது. சம்பாப்பயிர் அறுவடையாகுங் காலத்தில் இந்தப் பயிர் விதைக்கலாம். விதை முளைப்பதற்குப் போதுமான ஈரம் இருக்குமானுல் அறுவடையானவுடனே கூடிய சீக்கிரத்தில் நிலத்தை உழுது விதைத்துவிடலாம். நிலம் அதிகமாய்க் காய்ந்து போனுலும், அல்லது கலப்பையில் மண் ஒட்டும்படி அவ்வளவு அதிக ஈரமாயிருந்தாலும், நெற்பயிர் அறுவடையாவதற்கு ஒன்று அல்லது இரண்டு வாரங்களுக்கு முன், வயலில் தண்ணீர் இருந்தால் அதை வடித்துவிட்டு அவுரி விதைகளை விதைத்துவிடவேண்டும். பெரம்பலூர் தாலூகாவில் குளத்துப்பாசன நிலங்களில் அவுரியைக் கம்புப்பயிருடன் கலந்து விதைத்துக் கிணற்றுத்தண்ணீர் பாய்ச்சும் மேன்மையான பழக்கம் இருந்து வருகிறது. கம்புப்பயிர் விளைவான உடனே அதை வெட்டிக்கொண்டு அவுரியை நிலத்தில் விட்டுவைக்கிருர்கள். இதில் அதிகமான தழைப்பயிர் உண்டாகிறது. சம்பாப்பயிர் நடுங்காலத்தில் இதை நிலத்தில் மடித்து உழுது விடுகிருர்கள்.

## INDUSTRIAL NOTES.
## கைத்தொழில் குறிப்புகள்.

THE TANNING INDUSTRY.

**தோல் பதனிடும் தொழில்:**—போன பிப்ரவரி மாஸத்து ஸஞ்சிகையில் சாஸ்திரக்குறிப்புகளின் கீழ் இங்கிலாந்தில் லீட்ஸ் பட்டணத்தில் இந்திய சாஸ்திரீய சங்கம் என்று ஒரு ஸபை ஏற்பட்டிருப்பதாகவும் இந்தியாவிலுள்ள கைத்தொழில்களை சாஸ்திர முறைப்படி செய்ய போதிப்பதே அந்தச் சங்கத்தின் நோக்கமென்றும் சொன்னோம். தற்காலத்தில் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகும் தோல்கள் சாஸ்திர முறைப்படிப் பதனிடப்படாமல் அந்தத்தொழில் செய்கிறவர்கள் நஷ்டப்படுகிறார்களென்றும், அதை சாஸ்திர விதிப்படி செய்யவேண்டுமென்றும், இந்தச் சங்கத்தார் விரும்புகிறார்கள். பலதேசங்களிலுள்ள தோல் தொழிற்காரர்கள் ஒரு மீட்டிங்காகச் சேர்ந்து இந்த விஷயத்தைப்பற்றி ஆலோசிக்கப்போகிறார்களாம். அந்த ஆலோசனையில் மேலேசொன்ன சங்கத்தாரும் சேரப்போகிறார்களாம். அந்த ஸமயத்தில் இந்தியாவில் செய்யப்படும் தோல் தொழில் முறைகளைப் பற்றி ப்ரஸ்தாபம் செய்யும்பொருட்டு இந்த முறைகளின் விவரங்கள் தெரியவேண்டுமென்று சங்கத்தின் காரியதரிசியாகிய மிஸ்டர் பணிக்கர் என்பவர் அறிவித்திருக்கிறார். இவைகளை அறிந்த எவரேனும் உண்டானால் அவர் தமக்கு எழுதவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறார். ஆடுமாடு அடிப்பவரிடமிருந்து தோலை வாங்கி அதைச் சரியாய் பதனிடத்தெரியாமல் ஏற்றுமதி செய்வதால் அன்னிய தேசத்தில் நமது தோல் மதிக்கப்படாமற் போகின்றது. அதனால் நம் தொழிலாளிகள் பெரும் நஷ்டமடைகிறார்கள். இப்படியிருப்பதால் மிஸ்டர் பணிக்கர் வேண்டிக்கொள்ளுகிறபடி அந்தத் தொழிலில் அனுபோகமுள்ளவர்கள் அவர் வேண்டுவதைச் செய்வார்களென்று நம்புகிறோம்.

A MILL.

**ஒரு ஆலை:**—திருச்சூரில் டி. ஆர். சுந்தரமய்யருக்குச்சொந்தமான புஷ்பகிரி நெசவுச் சாலையை வீதாரம் ‘ஸ்பின்னிங் அண்ட் வீவிங் மில்’ என்று பெயருள்ள ஒரு லிமிடெட் கம்பெனியார் வாங்கிவிட்டார்கள். இந்தக் கம்பெனிக்கு மூலதனம் 120,000 ரூபாய்.

## REVENUE NOTES.
## ரெவினியூக் குறிப்புகள்.

PENAL ASSESSMENT

**தண்டத்தீர்வை:**—1317ம் பஸலியில் கோதாவரி ஜில்லாவில் 6,763 ரூபாயும், மதுரை ஜில்லாவில் 20,504 ரூபாயும், திருநெல்வேலி ஜில்லாவில் 13,314 ரூபாயும் தண்டத்தீர்வையாய் வசூல் செய்யப்பட்டனவாம். அதாவது, சம்மந்தப்பட்ட நிலங்களின் பேரில் வீதித்துப்பார்த்தால் ஏகர் ஒன்றுக்கு கோதாவரியில் 23 ரூபாயும், மதுரையில் 25 ரூபாயும், திருநெல்வேலியில் 58 ரூபாயும் ஆகிறது. இவ்வளவு உயர்ந்த தீர்வை போட என்ன காரணம் என்று விசாரித்ததில் வருஷாவருஷம் தண்டத்தீர்வை போட்டும் துராகிரதமாய் ஆக்ரமித்தவர்கள், நிலங்களை விடாததால் அவ்வளவு உயர்ந்த தண்டத்தீர்வை விதிக்கப்பட்டதென்று தெரியவந்தது. இதனால் தண்டத்தீர்வையைக் கொடுத்தும் ஆக்ரமித்தவனுக்கு லாபம் இருந்ததென்று ஏற்படுகிறது. ஆகையால் இப்படிப்பட்ட கேஸுகளில் தண்டத்தீர்வை விதிப்பதைவிட என்க்ரோச்மெண்டு ஆக்டுப்படி மாசூல் முழுவதையும் பிடுங்கிக்கொண்டு ஆக்ரமித்தவனையும் நிலத்திலிருந்து துறத்தி விடுவது நலமென்று கவரன்மெண்டார் சொல்லியிருக்கிறார்கள்.

NO ASSESSMENT FOR WELL IRRIGATION.

**கிணற்று இறவைக்குத்தீர்வையில்லை:**—கிருஷிகர் தாங்கள் சொந்தத்திலேயே கிணறு வெட்டினால் நிலங்களின் மாசூல் அதிகப்படும். அந்த மாசூல் அதிகத்தின் அளவுப்படி (தாமாஷாப்படி) ஸர்க்கார் அதிகதீர்வை ஏற்படுத்துவார்களென்று எண்ணுவது தப்பு அபிப்பிராயம். கவரன்மெண்டார் அப்படி அதிகதீர்வை ஏற்படுத்துவதில்லையென்று வாக்களித்திருக்கிறார்கள். நன்செய் நிலங்களில் சொந்தத்திலேயே கிணறு வெட்டி, அந்த நீரால் சாகுபடி செய்தால் அந்த நிலத்துக்கு ஸர்க்கார் நீர்ப்பாய்ச்சலாதாரம் இல்லாததுபோல் நினைத்துப் புன்செய்த் தீர்வையே தவிர நன்செய்த் தீர்வை ஏற்படாதென்று உத்தரவு செய்திருக்கிறார்கள். ஆனால் அப்படிப்பட்ட கிணற்றிற்கு ஸர்க்கார் சுவாதீனமான ஏரி, குளம், கால் முதலிய ஆதாரங்களிலிருந்து தண்ணீர் சுரந்தாவது, பாய்ந்தாவது இருக்கக்கூடாது.

## EDUCATIONAL NOTES.
## வித்தியா விஷயக் குறிப்புகள்.

POOR BOYS IN COLLEGES.

**கலேஜ்களில் படிக்கும் ஏழைப் பிள்ளைகள்.**—சென்னப்பட்டணத்தில் காலேஜ்களில் படிக்கும் ஏழைப் பிள்ளைகளுக்கு ஸ்காலர்ஷிப்புகள் கொடுத்து உதவிசெய்ய **ஏழைப்பையன்கள் நிதி** என்பதாக ஒரு நிதி சேர்க்கப்பட்டிருக்கிறது. இந்த நிதிக்கு முக்கியமாய் ஆனரெபில் மிஸ்டர் ஜஸ்டிஸ் கிருஷ்ணசாமி அய்யரும், மிஸ்டர் பி. ஆர். சுந்தர அய்யரும், மிஸ்டர் வி. பி. ராமசாமி அய்யரும், மிஸ்டர் கெ. சீனிவாச அய்யங்காரும் பொருளுதவி செய்திருக்கிறார்களாம். அந்த நிதி இந்த வருஷம் ப்ரொபஸர் ரெங்காச்சாரியாராலும், மிஸ்டர் கெ. பி. ராமநாதய்யராலும், மிஸ்டர் வி. எஸ். சீனிவாஸ சாஸ்திரியாலும் நிர்வகிக்கப்படும். அந்த நிதியிலிருந்து இன்டர்மீடியேட்டுக்கு வாசிக்கும் ஏழைப்பிள்ளைகளுக்கு மாதம் 7 ரூபாயும், பி. ஏ. ஆனர்ஸுக்கு வாசிக்கும் ஏழைப்பிள்ளைகளுக்கு மாதம் 10 ரூபாயும் கொடுக்கப்படும். மொத்தத்தில் 20 ஸ்காலர்ஷிப்புகள் கொடுக்கப்படும். ஸ்காலர்ஷிப்புகளுக்கு விண்ணப்பஞ் செய்து கொள்ளப் பிரியப்படுகிற ஏழைப் பிள்ளைகள் மைலாப்பூரிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண ஸ்டூடெண்ஸ் ஹோம் செக்ரெட்டேரிக்கு எழுதிக் கொள்ளவேண்டும்.

இந்த ஏற்பாடு ரொம்ப சிறந்தது. அனேக ஏழைப்பிள்ளைகள் வாரச்சாதம் சாப்பிட்டுக்கொண்டு சம்பளத்துக்கு வீடுவீடாய்ப்போய் அரை ரூபாயும் கால் ரூபாயுமாக பிச்சை எடுத்து சம்பளத்தைச் சேர்த்துக் கொடுக்கிறார்கள். இப்படிச் செய்வதில் அவர்களுக்குப் பிச்சை எடுப்பதில் காலம் போய்விடுகிறதே ஒழிய படிக்க நேரமில்லை. இப்போது ஏற்பட்டிருக்கும் ஏற்பாடு இந்த கஷ்டங்களை நீக்கும்.

SCHOOL FEES.

**பள்ளிக் கூடச் சம்பளம்.**—வித்தையிலாகா டைரெக்டர் டாக்டர் போரன் வித்தியா விஷயங்களை நன்றாய் அறிந்த சிலரைச்சேர்த்து ஒரு மீட்டிங் கூட்டி இப்போது பிள்ளைகள் கொடுத்துவரும் சம்பள விகிதங்களை உயர்த்துவதைப்பற்றி யோசித்துக் கொண்டிருப்பதாகத் தெரியவருகிறது.

## LITERARY NOTES.
## புஸ்தகக் குறிப்புகள்.

CHANDRAKANTHA.

**சந்திர காந்தா:**—இது ஒரு துப்பறியும் நாவல். நாட்டில் அங்கங்கே நடக்கும் கொலை, களவு முதலிய குற்றங்களைச் சாதாரணமாய்க் கண்டுபிடிப்பதற்கு போலீஸ் உத்தியோகஸ்தர்களுக்கு சாத்தியமில்லாம லிருக்கும்போது, அவர்கள் போலீஸ் உடுப்புகளை எடுத்துவிட்டு சாதாரண உடுப்பு போட்டுக் கொண்டு குற்றத்துக்கு சம்மந்தப்பட்டதாக சந்தேகிக்கக்கூடிய இடங்களுக்குப்போய் அனுமானப்படக்கூடிய மனிதர்களிடம் பழகி கடைசியில் குற்றத்தைக் கண்டுபிடிப்பார்கள். அதற்கே துப்பறிவது என்று பெயர். இப்படி துப்பறிந்து குற்றத்தைக் கண்டுபிடிக்கும் காரியமே இந்த நாவலில் முக்கியமாக விவரிக்கப்பட்டாலும், மற்றப்படி ஜனங்களுக்குள் காணப்படும் துர்வழக்கங்கள், சில ஜமீன்தார்களின் அநியாயமான நடத்தை, பண்டார சந்நிதியின் மடங்களில் நடக்கும் அநீதிகள் முதலியவைகளும் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. அதன் நடை சுலபமாயிருப்பதைப்பற்றி நமக்குச் சந்தோஷமேயென்றாலும், இலக்கணப்பிழைகளை நீக்கி எழுதுவது நல்லது. உதாரணமாக, 'நிச்சயம்' என்னும் சொல்லை அநேக இடங்களில் 'நிக்ஷயம்' என்று எழுதியிருக்கிறது. இதில் உள்ள சித்திரப்படங்கள் புகழத்தக்கவைகளாயிருந்தபோதிலும் பண்டார ஸந்நிதியையும், பிராமணப்பெண்ணையும் பற்றி வரைந்திருக்கும் சித்திரம் அனுசிதமென்பது நமது அபிப்பிராயம். இதை எழுதியவர் ரங்க ராஜு அவர்கள். புஸ்தகத்தின் விலை 12 அணா.

KINDERGARTEN METHOD.

**கிண்டர்கார்ட்டன் போதன முறை.**—முற்காலத்திலிது தனிப்பாடமாக இருந்தது. இப்போது எல்லாப் பாடங்களும், கிண்டர்கார்ட்டன் முறையாகவே கற்பிக்கவேண்டியிருப்பதால் இந்த அரிய நூலின் விஷயங்கள் அப்படி நடத்துவதற்குப் போதுமானவை. உபாத்தியாயர்களும், குழந்தைகளும் தங்களிருப்பிடத்தைவிட்டு நகராமல் படிப்பில் வெறுப்புண்டாகும்படி கற்பிப்பது பிசகென்று வித்தியாபிவிர்த்திகளறிந்து இந்த மாதிரி போதன முறையைக் கைக்கொண்டு தழுவி வருகிறார்கள். தொடர்முறை போதனை பரவிவருமிக்காலத்து இதுதான் சிசுக்களுக்கு ஏற்ற முறை. இதை ஒவ்வொரு எலிமெண்டரி பாடசாலை உபாத்தியாயரும் அறிந்து இந்த முறைப்படி சிசுக்களுக்குப் போதிப்பாராயின், அவர்களுக்கு சுகமும் அக்குழந்தைகளுக்கு ஆனந்தமுமுண்டாகும். சென்னப்பட்டணம், வெப்பேரி, நெ. 20, முத்தியாலு நாயக்கன் தெருவு, பி. வி. துரைசாமி அய்யங்கார் இயற்றியது. விலை 0—3—0.

## SCIENTIFIC NOTES.
## சாஸ்திரீயக் குறிப்புகள்.

KNOWLEDGE OF SCIENCE.

**சாஸ்திர ஞானம்.**—தற்காலத்தில் தொழில்கள் நடத்துவதில் சாஸ்திர ஞானம் அவசியம். பழைய காலத்தைப்போல முன்னோர் செய்த மாதிரியே செய்து தொழில்கள் செய்வது ஸாத்தியமல்ல. கெமிஸ்ட்ரி (ரசாயன சாஸ்திரம்), பிஸிக்ஸ் (பௌதிக சாஸ்திரம்), ஜியாலொஜி (பூகர்ப்ப சாஸ்திரம்), மெக்கானிக்ஸ் (யந்திர சாஸ்திரம்) இவைகள் போன்ற பல சாஸ்திரங்களில் பயிற்சியிருந்தால் மட்டும் வெவ்வேறு தொழில்களைத் தற்கால மாதிரியாய் நடத்தக்கூடும். ஐரோப்பியர் இப்படி நடத்துவதாலும், நம்முடைய தேசத்தார் இப்படி நடத்தாமல் தகப்பன் செய்தது போல பிள்ளை செய்வது என்கிற வழக்கமாய் நடத்துவதாலும் ஐரோப்பியரோடு போட்டிபோட முடியாமல் நம்முடைய தொழில்கள் மடிந்துபோகின்றன. ஐரோப்பிய நாடுகளில் மேல்குறித்த சாஸ்திரங்களைச்சொல்லிவைக்க பெரிய வித்தியா சாலைகள் ஏராளமான செலவுடன் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. இந்தியாவிலோ, அப்படிப்பட்ட வித்யா சாலைகள் இன்னும் ஸ்தாபிக்கப்படவில்லை. இரண்டொரு இடங்களில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் வித்தியா சாலைகள் பிரபலமாய் நடத்தப்படவில்லை. ஐரோப்பியரைப்போல் நாம் தொழில்கள் நடத்தவேண்டுமானால் மேலே சொல்லிய சாஸ்திரங்களில் பயிற்சிபெற்று அவைகளின் உதவியினால் நடத்தவேண்டும். அதற்குத் தேசமெங்கும் சாஸ்திர ஆராய்ச்சி சாலைகள் தேவை. கவரன்மெண்டார் எவ்வளவு சாலைகள்தான் ஏற்படுத்தமுடியும்? கோவில்களை கட்டி, குளங்களை வெட்டி தர்மங்கள் செய்வதுபோல் நம்முடைய தேசத்து தனவான்கள் சிறுவர்கள் பழகக்கூடிய சாஸ்திர சாலைகளை ஏற்படுத்தவேண்டும் ஸமீபத்தில் பம்பாயில் பிரபல வர்த்தகரான கரிம்பாய் இப்ராஹிம் நாலரை லக்ஷம் ரூபாயை அந்த மாகாணத்து கவர்னராகிய ஸர் ஜார்ஜ் கிளார்க்குக்கு அனுப்பி அதைக்கொண்டு சிறுவர்களை, முக்கியமாய் மகமதியர்களை, சாஸ்திரங்களிலும் கைத்தொழில்களிலும் பழக்கும்படி எழுதினார். அந்தப்பணத்தைப் பெற்றுக்கொண்டு, கிளார்க்கு துரை கரிம்பாய் இஷ்டப்படியே நடத்துவதாகச்சொல்லி அவரை ரொம்பவும் மெச்சி எழுதினார். இப்படிப்பட்ட தர்மங்கள்தான் தற்காலத்தில் இந்தியாவில் அவசியம்.

## LEGAL NOTES.
## சட்டக் குறிப்புகள்.

A NEW DECISION ABOUT MARRIAGE.

**விவாகத்தைப்பற்றிய ஒரு புதிய தீர்மானம்:**—ஸமீபத்தில் சென்னபட்டணம் ஹைக்கோர்ட்டில் திருநெல்வேலியிலிருந்து ஒரு இரண்டாவது அப்பீல் விசாரிக்கப்பட்டுத் தீர்மானம் செய்யப்பட்டது. இந்தக்கேஸில் முக்கியமாகத் தீர்மானிக்கப்பட்ட விஷயம் என்னவென்றால், கிருஸ்துவர்களுக்குப் பிறந்த ஒரு ஸ்திரீ ஹிந்து குலத்தைச்சேர்ந்த கைக்கோளன் ஒருவனைக் கலியாணம் செய்துகொண்டு, கலியாணம் ஆனது முதல் ஹிந்து மதத்தையே அனுசரித்து வருவாளாகில் அவள் கலியாணம் ஒழுங்காகுமா? என்பதுதான். மிஸ்டர் ஜஸ்டிஸ் சங்கரநாயர், மிகுந்த சாமார்த்தியத்துடன் சாஸ்திரப் பிரமாணங்களையும், சட்டதிட்டங்களையும், பற்பல ப்ரிவி கவுன்சில் தீர்ப்புகளையும் ஹைகோர்ட்டு, தீர்மானங்களையும் ஆதாரமாக எடுத்துக்காட்டி தொன்றுதொட்டு வழங்கும் வழக்கப்படிக்கும், த்விஜர்களல்லாத ஹிந்துக்களுக்குள் கலியாணம் செய்வதில் யாதொரு வரம்புகளையும் ஏற்படுத்தாத ஹிந்துக்களின் கோட்பாடுகள்படிக்கும், விவாகம் செய்துகொண்டவர்களின் உறவினர்களும் கூட்டத்தார்களும் யாதொரு குறையும் கூறாமல் இந்த கலியாணத்திற்குச் சம்மதித்து வதூவரர்களைத் தம் இனத்தார்களாகவே பாவித்து வெகுகாலம் நடந்து வந்ததாலும் அந்தக்கலியாணம் வெகு ஒழுங்காக நடந்திருப்பதாகத் தாம் அபிப்பிராயப் படுவதாக அவ்விதமே தீர்மானம் செய்தார். இந்தத்தீர்மானத்தில் இவருடன் கூடயிருந்த மிஸ்டர் ஜஸ்டிஸ் அப்துர் ரஹீமும் சம்மதித்தார்.

SECOND GRADE PLEADER.

**வக்கீல் தொழிலுக்கு ஒரு விபத்து:**—இனி முன்சீப் கோர்ட்டு (இரண்டாவது கிரேட்) வக்கீல்கள் என்ற ஸ்தானத்தையே கவரன்மெண்டார் எடுத்துவிட யோசித்து கொண்டிருக்கிறார்களாம். இந்த விஷயமாகக கவரன்மெண்டார் ஹைக்கோர்ட்டு ஜட்ஜிகளுடன் கலந்துகொண்டிருப்பதாய்த் தெரிகிறது. வக்கீல்கள் வரவர அதிகமாகி வருவதை உத்தேசித்து இந்த யோசனை யுண்டாயிருப்பதாகத் தோன்றுகிறது.

## MEDICAL NOTES.

## வைத்தியக் குறிப்புகள்.

GUM BOIL.

**எகரு கொழுத்து சீழ் பிடித்தல்:**—சில பேர்களுக்கு எகரு கொழுத்து அடிக்கடி பொறுக்கப்படாமல் வலிக்கும். அந்தச் சமயங்களில் எகரு சீழ்ப் பிடித்தும் இருக்கும். இதனுல் உண்டாகும் வலியை ஒரு நொடியில் தீர்த்து விடலாம். ஒரு பப்பாளிக் காயைக்கொண்டுவந்து அதை ஒரு பெரிய ஊசி அல்லது கத்தியால் குத்திஞல் அதிலிருந்து பால் வடியும். அந்தப் பாலில் கொஞ்சம் பஞ்சை சதும்ப நனைத்து அந்தப் பஞ்சைக்கொண்டு மெள்ள சீழ்ப் பிடித்த இடத்தில் தேய்த்தால் இரண்டு நிமிஷத்தில் புண் உடைந்து விடுமாம்.

ONIONS AND EAR ACHE.

**வெங்காயமும் காது வலியும்:**—குளிரினுல் சில பேர்களுக்குக் காதுவலி யுண்டாகும். இப்படிக் காது வலித்தால் ஒரு பெரிய வெங்காயத்தை எடுத்து அடுப்பில் போட்டுச்சுட்டு அதைக்காதில் சுடச்சுட வைத்துக்கட்ட வேணும். இப்படிச்சுடச்சுட வைத்துக்கட்டினுல் வலி சீக்கிரம் போய்விடும். வெங்காயத்தைச் சுடச்சுட வைத்துக் கட்டினுல் சில வேளைகளில் காதிலுள்ள குரும்பை உருகிவெளியே வரும். இப்படி ஆகும் பக்ஷத்தில் வெதுவெதுப்பான வெந்நீரைக் காதில் பீச்சாங்குழலை வைத்து அடிக்கவேணும். மறுபடியும் குளிரினுல் வலிக்காமலிருக்கும்படி காதில் கொஞ்சம் பஞ்சை அடைத்து வைக்கவேணும்.

SHAVING THE MOUSTACHE.

**மீசையைச் சிரைத்து விடுதல்:**—மீசையைச் சிரைத்து விடுதலே சுகாதார மார்க்கமாம். இல்லாவிட்டால் பலவித நோய்களுக்கு இடமுண்டாம். நாம் சுவாசத்தை வெளிவிடும்போது அந்தச்சுவாசத்தில் நம்தேகத்துள் இருக்கும் அசுத்தங்களின் அணுக்களெல்லாம் கலப்புண்டிருப்பதால் அவைகள் வெளிப்படும்போது காற்று மட்டும் ஆகாயத்தில் கலந்துவிட, கனமான அணுக்கள் மீசையின் அடிப்பக்கங்களில் ஒட்டிக்கொண்டு விடுகின்றனவாம். இவைகள் வேர்வை முதலிய பலவற்றுல் நாளடைவில் அழுகி நாம் சுவாசம் உட்கொள்ளும்போது அதனுடன் இந்த விஷ அணுக்கள் தேகத்திற்குள் சென்று வியாதிகளை உண்டாக்குகின்றனவாம். ஆகவே மீசையைச் சிரைத்து விடுவதே சிலாக்கியமென்று சொல்லப்படுகிறது.

## THE LADIES' COLUMN.

## பெண்கள் பத்தி.

—(o)—

CHILDREN SWALLOWING COINS.

**குழந்தைகள் நாணயங்களை விழுங்கிவிடுதல்:**—குழந்தைகள் நாணயங்களை வாயில் போட்டுக் கொண்டு விளையாடும்பொழுது அவைகளை விழுங்கி விடுவது ஸகஜம். ஆனுல் அதினுல் அபாயம் அதிகமில்லை. அந்த ஸமயங்களில் பெற்றோரும் மற்றோரும் உடனே பேதிக்கு மருந்து கொடுப்பது வழக்கம். இது பெருந்தப்பு. பேதிக்குக் கொடுக்கவே கூடாது. அப்படிக்கொடுத்தால் மலங்கரைந்து வெளியேறும் போது நாணயங்கள் குடலில் தங்கிப்போகும். திரும்ப பேதிக்குக் கொடுத்தால் குழந்தை தாங்க மாட்டாது. பெற்றோர் என்னசெய்வதென்று அறியாமல் அங்கலாய்க்கவும் குழந்தை கஷ்டப்படவும் இடமாகும். ஆகையால் பேதிக்குக்கொடாமல் அதற்கெதிரிடையாக மலங்கட்டும்படி ஏற்பாடு செய்ய வேண்டும். ஜலவடிவமான பால் முதலிய ஆகாரங்களை உபயோகிக்காமல் மலம் பெருகி இறுகுவதற்கேதுவான ரொட்டி, சோறு, முட்டை முதலிய ஆகாரங்களையும், ஓட்மீல், அரோரூட் மாக்கஞ்சிகளையும் பால் சேர்த்துக் கெட்டியாகக் காய்ச்சிக் கொடுக்கலாம். ஒரு வருஷத்திற்குட்பட்ட குழைந்தைகளுக்கு மேற்சொல்லிய அரோரூட் மாக்கஞ்சியே போதும். அதோடு மலம் இறுகும்படி ஜாதிக்காயை பாலில் உரைத்தும் கொடுக்கலாம். இவ்விதமாக மலம் பெருகி இறுகும்போது அதற்குள்ளே மேற்படி வஸ்துவும் சிக்கிக்கொண்டு வெளியேறும். ஒவ்வொரு நாளும் மலத்தைப் பரிசோதித்துப் பார்க்க வேண்டும்.

A JEWEL FRAUD.

**ஒரு நகை மோசம்:**—ப்ராங் காசுக்குப் பர்த்தியாக தென்னிந்தியாவில் திருநெல்வேலி, நாகைப் பட்டணம், சென்னப்பட்டணம் ஆகிய பெரிய பட்டணங்களிலெல்லாம் சிலபேர்கள் லட்சுமி பிம்பம் முதலியவைகளைப்போட்டு ப்ராங் காசின் விலைக்குக் கொஞ்சம் ஸகாயமாய் விற்று வருகிறார்கள். அதை வர்த்தகர்கள் போஸ்ட்டு மூலமாய்த் தருவித்து விற்றதில் வாங்கின பல ஜனங்கள் பொத்தான், காசுமாலைகளாக இணைக்கும்போது செம்பில் செய்து பொன் கலர் போட்டதாக வெளிப்பட்டு அநேகர் மோசம் போய் விட்டதாகத் தெரிகிறது. காசு மாலைக்காக இப்படிப்பட்ட காசுகளை வாங்குகிறவர்கள் இதை நன்றாய்க் கவனிக்கவேணும்.

## THE BOYS' COLUMN.

## பையன்கள் பத்தி

——(o)——

### THE MERITS OF TEAK WOOD.

**தேக்கு மரத்தின் குணங்கள்.**—அதிக நீளமாயும், வீரம் பாய்ந்ததாயும்,பெரிய உத்தரங்களாய்க் கிடைக்கக்கூடியதுமான மரம் இது ஒன்றே. மிகவும் கனமுள்ளதுமல்ல. ஏனென்றால் கோடாரி, அரிவாள், இழைப்புளி, இவைகளைக் கொண்டு சேதமில்லாமல் இந்த மரங்களில் வேலை செய்யலாம். மேலும் இந்த மரங்களினூடே கட்டைகளுக்குச் சேதமில்லாமல், ஆணிகளைச் செலுத்தலாம். சில மரங்களில் ஆணியை அடித்தால் கீரல் ஏற்படும். எல்லாவற்றிலும் சிலாக்கியமான குணம் எது என்றால் இந்த மரங்களோடு சேர்த்துள்ள இரும்பு ஆணிகளோ அல்லது இரும்பு உத்தரங்களோ இவைகள் ஒருபொழுதும் துருப்பிடிப்பதே யில்லை. இந்த குணம் வேறு மரங்களுக்கு இல்லாமலிருப்பதினால் தான் எல்லா தேசத்து ஜனங்களும் கட்டிடங்களுக்கு இந்த மரத்தையே உபயோகிக்கிறார்கள். இதைத் தவிர இதன் நிறமோ கண்ணுக்குத் திருப்தியான வார்நீஷ் கொடுத்தாற்போன்ற கருஞ்சிவப்பு. இதன் வாஸனையோ மரத்தை அரிக்கின்ற புழுப் பூச்சிகளை அண்டாமல் செய்கிறது. இந்த மரத்திலிருக்கும் ஒருவித எண்ணெய்ப் பசையால்தான் இது கெட்டுப் போகாமல் வெகு காலம் நீடித்திருக்கின்றது.

### A PHYSICAL CULTURE ASSOCAITION.

**ஒரு தேகப் பயற்சிச் சங்கம்:**—சமீபத்தில் புனாவில் தேகப்பயற்சிச் சங்கம் ஒன்று புதிதாய் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இது 1908-ம் வருஷத்தில் ஆரம்பிக்கப்பட்டு வரவர விருத்தியடைந்து வருகிறது. இதற்கு 200 மெம்பர்களும் 100 மாணவர்களும் இருக்கிறார்கள். இதில் பலவிதமான ஸ்வதேச பிறதேச விளையாட்டுகள் நடக்கின்றன. இதற்கு டாக்டர் நானா சாஹிப் தேஷ்முக் என்பவர் 3,000 ரூபாய் நன்கொடை கொடுத்திருக்கிறார். கோலாப்பூர், பரோடா முதலிய நாட்டு அரசர்களும் இதற்கு போஷகர்களாய் உதவி செய்கிறார்கள். இது வரையில் ரூபா 10,000 நிதி சேர்ந்திருக்கிறதாம்.

## INDIAN NEWS.

## இந்தியநாட்டு ஸமாசாரங்கள்.

### A NOVEL POST CARD.

**ஒரு விநோத போஸ்ட் கார்ட்.**—லாகூர் பொருட்காட்சி வித்தியா கூடத்தில் வெகு விநோதமான ஸாமான் ஒன்று வைக்கப்பட்டிருந்ததாம். அது என்ன வென்றால் நம்முடைய கவர்னர் ஜெனரலாகிய லார்ட் மிண்டோவின் ஜீவிய சரித்திரம் எழுதப்பட்ட போஸ்ட்கார்டைத் தவிர வேறொன்றுமில்லை. அந்த போஸ்ட்கார்டில் ஒரு பார்ஸி லார்ட் மிண்டோவின் ஜீவிய சரித்திரத்தை 100 வரிகளில் அடக்கி எழுதியிருந்தாராம். அந்த 100 வரிகளில் 1737 வார்த்தைகளும் 9104 எழுத்துக்களும் அடங்கியிருந்தன. அந்த ஜீவிய சரித்திரம் நன்றாய் வாசிக்கப்படக்கூடியதாயுமிருந்ததாம். அந்த போஸ்ட் கார்ட் நன்றாய்ச் சட்டம் போட்டு வைக்கப்பட்டிருந்ததாம். ஒரு போஸ்ட்கார்டில் 100 வரிகள் எழுதப்பட்டிருக்க வேண்டுமானால் அவைகள் பொடி எழுத்தில் நெருங்க அல்லவோ எழுதப்பட்டிருக்கவேண்டும்? அப்படி எழுதப்பட்டிருந்தும் வரிகளை யாரும் நன்றாய் வாசிக்கமுடியு மெனப்படுகிறது. அந்தப் பொருட்காட்சி வித்தியாகூடத்துக்கு யார் போனாலும் சரி அவர்கள் அந்த போஸ்ட் கார்டைத்தான் வைத்த கண்வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்து விட்டு வந்தார்களாம்.

### A STATE NEWSPAPER.

**ஒரு ராஜாங்க சமாசாரப் பத்திரிகை.**— பல சமாசாரப் பத்திரிகைகளை தம்முடைய நாட்டில் படிக்கக்கூடாதென்றும், வரவழைக்கக் கூடாதென்றும் க்வாலியர் மகாராஜா சிந்தியா அவர்கள் கொஞ்ச நாளுக்குமுன் உத்தரவு பிறப்பித்தார். தகுந்த பத்திரிகைகள் இல்லாததனால் தம்முடைய ஜனங்கள் உபயோகத்துக்காக ஒரு வாரப்பத்திரிகை ஸ்தாபிக்க ஏற்பாடு செய்திருப்பதாய்த் தெரியவருகிறது. ராஜாங்கத்தாரால் அங்கீகாரம் செய்யப்பட்ட வியாபார விஷயங்களும் ராஜாங்க விஷயங்களுமே முக்கியமாய் அதில் பிரசுரம் செய்யப்படும். அது க்வாலியர் ராஜகங்கத்தின் அதிகாரத்துக்கு உட்பட்டு வெளியிடப்படும் என்று தோன்றுகிறது.

HOUSES BUILDING IN BOMBAY.

**பம்பாயில் வீடு கட்டுதல்.**—பம்பாய் நகரம் ஜன நெருக்கத்தினால் சுகங்கெட்டு வருவதால் நெருக்கத்தைக் குறைக்கப் பிரயத்தனம் நடந்து வருகிறது. அதற்காக முனிஸிபாலிடியார் தேர்ந்தெடுத்திருக்கும் இடத்தைப் பூராவாகவோ, ஏகதேசமோ, வாங்கிக் கூட்டுறவு முறையில் வீடுகள் கட்டிக் கொடுப்பதற்காக, கனம் விட்டல்தாஸ் தாமோதர தாகர்ஸி அவர்களும் இன்னும் சிலரும் முயன்று வருவதாகத் தெரிய வருகிறது. முதலாளிகள் பணத்துக்கு ஸரியான வட்டி கிடைக்காத பக்ஷத்தில் இப்பேர்ப்பட்ட வழிகளை ஆலோசிப்பது நலம்.

CATTLE DISEASES.

**மாட்டு வியாதிகள்:**—மைஸூர் ஸமஸ்தானத்து ஜில்லா மாட்டு வைத்தியர்களைக்கொண்டு மாட்டு வியாதி, மாடுகள் வளர்த்தல், மாடுகளுக்குத் தீனி சேகரித்தல், முதலான விஷயங்களைப்பற்றி துண்டுப்பத்திரிகைகள் எழுதி, மாடு வைத்திருக்கிறவர்களுக்குக் கொடுக்கும்படி ஏற்பாடாகியிருக்கிறது.

THE SALEM CO-OPERATIVE CONFERENCE.

**சேலம் ஐக்கிய நாணயச்சங்கக்கூட்டம்.**—நாளது மார்ச்சு மாஸம், 19, 20, இந்தத் தேதிகளில் சேலத்து ஐக்கிய நாணயச் சங்கத்தார் எல்லாரும் ஒரு கூட்டம் கூடினார்கள். அந்தக் கூட்டத்தில் கனம் வி. கிருஷ்ணசாமி அய்யர் அக்கிராஸனம் வகித்து, கூட்டுறவுச் சங்கங்களினால் உண்டாகும் பயன்களைப் பற்றி வெகு நன்றாய்ப் பேசினார்.

A SWADESI CHAMBER.

**ஒரு ஸ்வதேச வர்த்தக சங்கம்.**—கல்கத்தாவில் ஸ்வதேச வர்த்தகர்கள், தொழிலாளிகள், ஸாஹூகார்கள் எல்லாருங்கூடி ஒரு சங்கம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இந்தச் சங்கத்தார் ஒரு தொழிலை மட்டில் கவனிக்காமல் ஸகல விதமான ஸ்வதேசி வியாபாரம், கைத்தொழில் முதலான எல்லாவற்றையும் கவனிப்பார்களாம்.

DAIRY FARMING

**பால் தயிர் வியாபாரம்.**—பம்பாய் ராஜதானியில் உள்ள கைரா, ஆமதாபாத் என்னும் ஜில்லாக்களில் அநேகம்பேர்கள் மாடுகள் வைத்துப் பால் தயிர் வியாபாரம் செய்ய ஆரம்பித்திருக்கிறார்களாம். இப்படிக்கு இந்த வியாபாரத்துறையில் நூதனமாய் இறங்கியிருப்பதுதான் இதில் விசேஷம்.

## FOREIGN NEWS.

## அந்நிய நாட்டு ஸமாசாரங்கள்.

STATE AID TO INDUSTRY IN TURKEY.

**துருக்கி தேசத்தில் கைத்தொழிலுக்கு ஸர்க்கார் உதவி.**—சுதேசக் கைத்தொழில் விர்த்தியாகும்பொருட்டுத் துருக்கி நாட்டு அரசர் விசேஷ முயற்சிகள் செய்வதுடன் பின்வரும் லாபகரமான உத்தரவும் செய்திருக்கிறார் :—

(1) கைத்தொழிற்சாலை முதலியவைகள் ஏற்படுத்துவதற்கு வேண்டிய நிலங்கள் இனமாய்க்கொடுக்கப்படும்.

(2) நிலம் கொடுக்கப்பட்ட நாள் முதல் மூன்று வருஷங்களுக்குள் கட்டிடங்கள் கட்டி வேலை ஆரம்பிக்கப்படவேண்டும்;

(3) வருகிற 15 வருஷங்களுக்கு எவ்வித வரியும் அந்தக் கட்டிடங்களுக்கு விதிக்கப்பட மாட்டாது.

(4) சுதேசக் கைத்தொழில் அபிவிர்த்தியின் பொருட்டு யந்திரங்கள் முதலிய சாமான்கள் அந்நிய தேசங்களிலிருந்து வரவழைக்கப்பட்டால் அவைகளுக்குத் துறைமுகவரி விதிக்கப்பட மாட்டாது.

(5) கைத்தொழிற்சாலை ஸ்தாபிப்பவர்களுக்கு அரசாட்சியால் இன்னும் அனேக உதவிகள் செய்யப்படும்.

(6) துருக்கியில் உண்டாகும் பொருள்களிலிருந்து சாமான்களைச் செய்யும் கம்பெனியார் மற்ற தேசங்களிலிருக்கும் விலையில் நூற்றுக்குப் பத்து வீதம் அதிகமாய் விற்கக்கூடியதாகச் செய்வார்களானால் அவர்களுக்கு அரசாட்சியார் உபகாரஞ் செய்வார்கள்.

COTTON TRADE IN LANCASHIRE.

**லங்காஷைரில் பருத்தி வியாபாரம்.**—இங்கிலாந்திலுள்ள லங்காஷைரில் பருத்தி நூல் வியாபாரம் சென்ற 1909-ம் வருஷத்தில் குறைந்ததுபோல எந்த வருஷமும் அவ்வளவு குறைந்ததில்லையாம். நூல் நூற்கும் 82 கம்பெனிகளில் 68 கம்பெனிகளுக்கு நஷ்டமாம். 14 கம்பெனிகளுக்கு மாத்திரம் லாபமாம். எல்லாக் கம்பெனிகளுக்கும் சேர்ந்து சுமார் 36 லக்ஷம் ரூபாய் நஷ்டம் ஆயிருக்கிறதாம். அநேக கம்பெனிகளில் 'ரிஸர்வ் பண்டு' அதாவது, முன் வருஷங்களில் லாபத்திலிருந்து மீத்துச் சேர்த்து வைக்கப்பட்ட பணத்திலிருந்துகூட அதிகமாய்ச் செலவழித்திருக்கிறார்களாம். அப்படிப்பட்ட ரிஸர்வ் பண்டிலிருந்தே பல கம்பெனிகள் போன வருஷம் லாபம் பகிர்ந்து கொடுத்தார்களாம். சில கம்பெனிகளில் கையிருப்பே இல்லாமல் பெருத்த நஷ்டமாம்.

## SEASON.

## கால ஸ்திதி.

RAINFALL.

**மழை.**—ஏப்பிரல்மீ 1-தேதியிலிருந்து மார்ச்சுமீ 29-ம்தேதி முடியப் பெய்தமழை அளவும், இந்தக் காலத்தில் சராசரியில் பெய்திருக்கவேண்டிய மழை அளவும், கீழே அங்குலத்தில் குறிக்கப்பட்டிருக்கின்றன.

| மழை பெய்த ஊரின் பெயர். | பெய்த மழை அங்குலம். | பெய்திருக்க வேண்டிய மழை அங்குலம். |
|---|---|---|
| கோபால்பூர் | 29 | 48 |
| வால்டேர் | 35 | 44 |
| காக்கிநடா | 34 | 40 |
| மசூலிப்பட்டணம் | 37 | 41 |
| நெல்லூர் | 28 | 31 |
| மதராஸ் | 42 | 50 |
| கூடலூர் | 35 | 53 |
| நாகப்பட்டணம் | 24 | 56 |
| பாம்பன் | 32 | 39 |
| கொளும்பு | 63 | 89 |
| திருவநந்தபுரம் | 69 | 62 |
| கொச்சி | 97 | 116 |
| கள்ளிக்கோட்டை | 127 | 115 |
| மங்களூர் | 146 | 124 |
| மெர்க்காரா | 137 | 126 |
| ஐதராபாத் | 29 | 32 |
| ரெய்ச்சூர் | 26 | 31 |
| பல்லாரி | 19 | 20 |
| கர்நூல் | 19 | 28 |
| கடப்பை | 42 | 33 |
| ஹாஸ்ஸான் | 42 | 35 |
| பெங்களூர் | 39 | 35 |
| கொடைக்கானல் | 57 | 60 |
| உதகமண்டலம் | 61 | .. |
| கோயம்புத்தூர் | 22 | 21 |
| வேலூர் | 59 | .. |
| சேலம் | 51 | 40 |
| திருச்சிறுப்பள்ளி | 33 | 33 |
| புதுக்கோட்டை | 38 | .. |
| மதுரை | 50 | 33 |
| திருநெல்வேலி | 27 | 23 |

## CROPS AND MARKET REPORT.

## பயிர்களும் மார்கெட் நிலவரமும்.

COTTON GOODS IN MADRAS.

**மதராஸில் துணி ஸாமான்கள்.**—பிப்ரவரிமீ 19-தேதியிலிருந்து மார்ச்சுமீ 19வ வரையில் அந்நிய தேசங்களிலிருந்து சென்னப்பட்டணத்தில் இறக்குமதியான துணி சாமான்களின் விவரம்.—நூலும், முறுக்கு நூலும் 5,28,800 ராத்தல், காரிகத்துணிகள் 16,81,712 கஜம், சலவைத்துணிகள் 13,23,783 கஜம், இதர திநுசுத்துணிகள் 21,35,824 கஜம். இதே காலத்தில் சென்னப்பட்டணத்திலிருந்து ரெயில் வழியாய் 18,785 அந்தர் துணி சாமான்கள் வெளி ஜில்லாக்களுக்கு அனுப்பப்பட்டன. ஒரு அந்தர் என்பது 112 ராத்தல். ஒரு ராத்தலுக்கு சுமார் $2\frac{1}{2}$ கஜம் துணி என்று வைத்துக்கொள்ளலாம். மார்ச்சு மாஸம் 22-ம் தேதியன்று பம்பாயில் 20-ம் நெ. காரிக நூல் விலை ராத்தல் ஒன்றுக்கு 0-7-6 முதல் 0-8-0 வரையில் இருந்ததாகத் தெரிய வருகிறது.

CAUSES OF HIGH PRICES.

**விலை ஏற்றத்தின் காரணங்கள்.**—இந்தியாவில் விலைவாசியின் ஏற்றம் பின்வரும் காரணங்களால் உண்டாயிருக்கிறதென்று ஐக்கிய மாகாணத்தின் அக்கவுண்டெண்டு ஜெனரல் சொல்லுகிறார். அடியில் கண்ட காரணங்களில் ஒவ்வொன்றினாலேயும், சேர்க்கையினாலேயும் உயர்ந்திருக்கிறது. அவையாவன:—மழையில்லாமை, நாணயங்களின் பழக்கமில்லாமை, நாட்டுக்குத் தேவையாயுள்ள தான்யங்களைக்கூட வெளியேற்றிவிடல், கோதுமையை வெளியேற்றிவிடல், கூலி வீதங்கள் அதிகமாயிருப்பது, அயல் நாட்டு சாமான்களை அதிகமாகத் தருவித்தல், அயல் நாட்டு முதல் இந்த நாட்டுக்கு விசேஷமாக வந்திருப்பது, ரயில்வே விர்த்தி, அயல் தேச விலை யுயர்த்தி.

RICE CROP.

**நெல் பயிர்.**—சென்னை ராஜதானியில் ரயத்துவாரிக் கிராமங்களில் இது வரையில் 7,462,200 ஏகராவில் நெல் சாகுபடியாயிருக்கிறதாம். இந்த விஸ்தீரணத்தில் பட்டணம் படி 32 கொண்ட மூட்டையாக 44,788,100 மூட்டை அரிசி கிடைக்கக்கூடியது. ரயத்துவாரி அல்லாத இதரக் கிராமங்களில் 503,000 ஏகரா சாகுபடியாயிருப்பதாகவும், அதிலிருந்து 4,000,000 மூட்டை அரிசி கிடைக்கும் என்றும் சொல்லப்படுகிறது.

IMPORT OF SUGAR.

**சர்க்கரை இறக்குமதி.**—சென்ற பிப்ரவரி மாஸம் 19-ந்தேதிமுதல் மார்ச்சு மாஸம் 19ம் தேதி வரையில் சென்னப்பட்டணத்தில் இங்கிலாந்திலிருந்து 63 அந்தரும், ஆஸ்டரியா ஹங்கெரியிலிருந்து 500 அந்தரும் ஜாவாவிலிருந்து 2812 அந்தரும் இறக்குமதியாயின.